அழகு! அழகு! அழகு!
மன்னர்கள் கட்டி வைத்த
கோட்டை அழகு!
**சாரதா’ஸ்** கட்டி வைத்திருக்கும்
துணிக்கோட்டை அழகு!!



# சாரதாஸ்

முகூர்த்தப்பட்டு புடவைகளுக்கு அதிர்ஷ்டமான இடம்

827, அண்ணா சாலை,
தன் பில்டிங், சென்னை - 2.
போன் : 852 11 77

32, N.S.B. ரோடு,
திருச்சி - 620 002
போன் : 27077

சாரதாஸ் சென்னை - 2, திருச்சி - 2 ல் மட்டுமே.
வேறு எங்கும் கிளைகள் கிடையாது.



# தபராணம்

"தவித்துக் கொண்டிருந்தேன். முழுப் படத்துக்கு ஸ்கிரிப்ட் ரெடி. இரண்டு ஹீரோக்கள் தயார். பணத்தை வைத்துக் கொண்டு, தயாரிப்பாளர் 'எப்போது ஷூட்டிங்?' என்று கேட்டுக் கொண்டிருந்தார். தேவை - ஒரு ஹீரோயின்!

"இருக்கிற நூற்றுக்கணக்கானவர்களில் ஒருவரைப் பிடித்துப் போட்டுவிடலாம்தான். ஆனால் என் மனக்கண்ணில் நான் பார்த்துக் கொண்டிருந்த பெண்ணை அவர்களுடன் ஒப்பிட முடியாது! தெய்வீகமான முகம்... பனிச்சென்று பூத்தாற்போன்ற சிரிப்பு... மின்சாரம் போல் ஒரு துடிப்பு... கூடவே மென்மை...



''பிரதமர் பாக்கெட்லே சின்ன பாக்கெட் கம்ப்யூட்டர் வைத்திருக்கிறாரே எதுக்கு?''

''அவரை எந்தெந்த கட்சி ஆதரிக்கிறாங்கங்கறது மறந்து போயிடுதாம். கட்சிகள் பெயரை கம்ப்யூட்டரில் பதிஞ்சு வைத்திருக்காராம்.''

— ப்ரியதர்சினி

"யாரைப் போடலாம்? சல்லடை போட்டுத் தேடித் தேடியே ஐந்து மாதங்கள் ஓடி விட்டன. தற்செயலாக ஒருநாள் 'சிறைச்சாலை' ஷூட்டிங்கில் தபுவைப் பார்த்தேன். அட, நான் தேடிக் கொண்டிருந்த முகம் இது வல்லவா?

"மனசுக்குள் உற்சாகம் பீறிட, உடனே பேசி, ஒப்பந்தம் செய்து, ஷூட்டிங் தொடங்கி விட்டேன்.

"உண்மையைச் சொல்கிறேன். தபு ஒரு ஹிந்தி நடிகை என்பதற்கு மேல் அவரைப் பற்றி எனக்கு ஒன்றும் தெரியாது. அவர் நடித்த படங்களுள் ஒன்றைக்கூட நான் இன்று வரை பார்த்ததில்லை. நன்றாக நடிப்பாரா? ஒத்துழைப்பாரா? ஹிந்திக்காரர்களுக்கே உரிய அலட்டல் உண்டா? அடாவடி ரகமா? மாட்டிக்கொண்டு விழிக்கப் போகிறோமா?- எது பற்றியும் யோசிக்கவில்லை. அவர் முகம் என்னை வசீகரித்தது. அவ்வளவுதான்.

"ஆனால், என் எதிர்பார்ப்புக்கும் மேலாகத் திறமை காட்டினார் தபு. பாவங்கள் எத்தகையதானாலும் அவருக்கு இயல்பாக வந்துவிடுகின்றன. எப்படிப்பட்ட காட்சியிலும் தயங்காமல் க்ளோஸ்-அப் வைக்க முடிகிறது. இதெல்லாம் கூடப் பெரிய விஷயமில்லை. அவரது எளிமை!

"பொதுவாக ஹிந்தி நடிகைகளைக் கையாள்வது சிரமம். அவர்களது அல்ட்ரா - மாடர்ன் பழக்கவழக்கங்களும் அதிரடி தோரணையும் ஸ்பெஷல் நாற்காலி, நட்சத்திர ஹோட்டல், போக்குவரத்து நாட்டங்களும் யாரையும் பயமுறுத்தக்கூடியவை. மாறாக, தபுவிடம் ஒரு இயல்பான எளிமையை நான் கண்டேன்.

"ரோட்டோர டீக்கடைகளில் சிங்கள் டீ அடித்துவிட்டு, கிடைத்தால் கார்-ஷெட்டிலும் பிளாட்ஃபாரத்திலும் கூடப் படுத்து, எழுந்து வேலையைப் பார்ப்பது நம் சினிமாக்காரர்களின் வழக்கம். என் யூனிட்டும் அப்படியே. ஆனால் தபு எங்களோடே ஒட்டிக் கொண்டதுதான் ஆச்சர்யம்.

"அவர் ஹிந்தியில் நடிக்கிற ஹைதராபாத் பெண். நானோ, கோடம்பாக்கத்தில் வசிக்கிற திருநெல்வேலி ஆசாமி. அவருக்குத் தமிழ் சுத்தமாகத் தெரியாது. எனக்கு ஹிந்தி வரவே வராது. ஏதோ ஒரு விதம்... எப்படியோ ஒரு வகையில் கம்யூனிகேஷன் நடந்து, என் ஸ்கிரிப்ட் அவருக்குப் புரிந்து, நடித்து முடித்து.... டென்ஷனே இல்லாமல் ஷூட்டிங் முடிந்துவிட்டது பெரிய ஆச்சர்யம்.

"பெரிதாகச் சொல்லும்படியான கதை ஒன்றும் கிடையாதுதான். ஆனால் காதல் யாருக்குத்தான் அலுக்கும்? ஒன்று நிச்சயம். காதல் தேசம் வந்தபின் தபு தமிழில் அழுத்தமாகக் கால் ஊன்றப் போகிறார். அவரது தொழில் நேர்த்தியும் வெறித்தனமாக ஈடுபாடும் இதைத்தான் எனக்குச் சொல்கின்றன."

— *தமது 'காதல்தேசம்' படத்தின் ஹீரோயின் பற்றி இயக்குநர் கதிர்.*

சந்திப்பு: **ஔரங்கசீப்**



**''இன்றைக்கு காபிபோஸா, அந்நியச் செலாவணி, அமுலாக்கப் பிரிவு என்று ஏகப்பட்ட விஷயங்கள் மக்களுக்குத் தெரிகின்றதென்றால் அதற்கு எங்கள் ஆட்சிதான் காரணம் என்பதை மறந்து விடக்கூடாது!''**

**— ப்ரியதர்ஷினி**

சென்னைத் தொலைக்காட்சியின் முன்னாள் செய்திவாசிப்பாளர். 91 தேர்தலில் தி.மு.க. சார்பில் மயிலாப்பூர் தொகுதியில் போட்டியிட்டவர். கவிஞர். நிர்மலா சுரேஷை ஞாபகமிருக்கிறதா? சில வருடங்கள் முன்பு மகனின் படிப்பு கருதி, கனடா சென்றவர் தற்சமயம் (தற்காலிகமாக) சென்னை வந்திருக்கிறார்.

ஹைகூ கவிதைகள் பற்றிய அவரது ஆய்வுக் கட்டுரைத் தொகுப்பைப் புத்தகமாக்கவும் கனடாவில் ஆகஸ்ட் இறுதியில் நடக்கவிருக்கிற தமிழ் மாநாட்டுக்கு இங்கிருந்து சில கலைஞர்களைத் தேர்ந்தெடுத்துக் கூட்டிச் செல்லவும் இந்த வருகை.

தமது கனடா அனுபவங்களைக் கூறுகிறார் நிர்மலா சுரேஷ் :



# கெடுபிடி இல்லாத கனடா லைஃப்!

**க**னடாவில் என் மகன் படிக்கையில் நான் சும்மா இருப்பானேன் என்று அங்கே ஒரு பல்கலைக் கழகத்தில் பதிவு செய்து கொண்டு 'மூன்றாம் உலக நாடுகளின் அரசியல் போக்குகள்' பற்றிய ஆராய்ச்சியில் ஈடுபட்டேன். பல நாட்டு மாணவர்கள் வந்து பயிலும் அந்த வகுப்பிலேயே முதலாவதாக வந்ததில் எனக்கு எக்கச்சக்க சந்தோஷம்.

கனடாவில் இந்தியர்கள் நிறையப் பேர் தொழில்ரீதியில் வந்து செட்டில் ஆகி இருக்கிறார்கள். தென்னிந்தியர்கள் அதிகம்! அப்படிச் சில தென்னிந்தியர்களுடன் அங்கே நான் அறிமுகம் செய்துகொண்டு, பழகத் தொடங்கவும், ஒரு தமிழ்ப் புத்தாண்டு விழா சமயம் பேச அழைத்தார்கள்.

அதுதான் ஆரம்பம். என் பேச்சு பிடித்து விட, விழாவுக்கு வந்திருந்த 'சூரியன்' பத்திரிகை ஆசிரியர், மறுநாளே ஒரு நிருபரை அனுப்பினார், பேட்டிக்கு.

தொடர்ந்து கனடா வானொலியின் தமிழ்ப் பிரிவு, ('கீதவாணி') ரோஜர் டிவியின் தமிழ்ப் பிரிவு ('கலாபம்') என்று மீடியாவுக்கும் எனக்குமான தொடர்பு கனடாவிலும் விடாமல் பிடித்துக் கொண்டது!

அங்கே, வானொலியில் பணியாற்றும் நண்பர் ராஜகோபால், ''சனிக்கிழமை தோறும் காலை ஒன்பது மணிக்கு உங்கள் நேரம். பேசுவீர்களோ, கவிதை படிப்பீர்களோ, பேட்டி காண்பீர்களோ – உங்கள் விருப்பம். 'நிர்மலா சுரேஷ் நேரம்' என்றே அறிவித்து விட்டேன். வாரம் தவறாமல் வந்து விடுங்கள்'' என்றார்!

கனடா வானொலியைப் பொறுத்தவரை 'நிர்மலா சுரேஷ் நேரம்' வெகு பிரபலமான நிகழ்ச்சி. தமிழர்களின் ஒட்டுமொத்த வரவேற்பை அது பெற்று விட, அடுத்த அழைப்பு, 'கலாபம்' தொலைக் காட்சியினரிடமிருந்து.

''கவியரங்கம், ஜோடிப் பொருத்தம் நிகழ்ச்சிகளுக்கு நீங்கள் பொறுப்பு ஏற்றுக் கொண்டு விடுங்களேன்'' என்றார் நண்பர் சீனிவாசன்.

**ஒ**ரு விஷயம் குறிப்பிட

வேண்டும். அங்கே ஒருத்தரை நம்பி, பொறுப்பை அளித்துவிட்டால் அவ்வளவு தான். அப்புறம் எந்தக் குறுக்கீடும் தலைநீட்டலும் மேலாண்மையும் - யாரிடமிருந்தும் வராது! மிகப் பெரிய சுதந்தரம்! சென்னை டீ.வி.யின் அரசாங்க கெடுபிடிகள், கட்டுப்பாடுகளிலேயே பழகிய எனக்கு, வானத்தில் பறக்கிற உற்சாகம்!

மென்மையான, இதமான நட்புச் சூழ்நிலை, மிகச் சிறந்த தொழில்நுட்பம், நேர்த்தியான நிகழ்ச்சிகள்...

அங்கே டீவியில் நிறைய இலங்கைத் தமிழ் அறிவிப்பாளர்கள் உண்டு. 'தமிழ்நாட்டுப் பெண்' என்று என் மீது பிரத்தியேகப் பாசம் அவர்களுக்கு. சுத்தமான, ஆங்கிலக் கலப்பே இல்லாத தமிழைக் கனடா டீவியில் கேட்கலாம்!

சென்னை டீவிக்களின் நிகழ்ச்சிகளைப் பார்த்துவிட்டு, "கலந்து கொள்கிறவர்களைக் கிண்டலடிப்பதும் மரியாதைக்குறைவாக நடத்துவதும் அதிகமாக இருக்கிறதே?" என்று வருத்தப்படுவார் 'கலாபம்' சீனிவாசன்.

இதை மனத்தில் கொண்டு, 'கலாப'த்தில் நான் நடத்தும் 'ஜோடிப் பொருத்தம்' நிகழ்ச்சியில் கூட 'இது ஒரு போட்டி; அவ்வளவுதான்! இதில் வெற்றி பெறாதவர்கள் கூட லட்சிய தம்பதியராக இருக்கக்கூடும்' என்று அறிவித்து விட்டுத்தான் பரிசு வழங்குவேன்.

கனடா டீவியில் தமிழ் நிகழ்ச்சிகளின் நேரம் தினசரி அரை மணிதான். அவ்வப்போது சனிக்கிழமை பிற்பகல்களில் ஒரு மணி நேரத்தை, பத்தாவது சேனலிலிருந்து வாடகைக்கு எடுத்துக் கொள்ளும் 'கலாபம்.'

குடும்ப நிகழ்ச்சிகள் தான் நடத்துகிறேன் என்றாலும் பல சமயங்களில் மக்களோடு பழகுகையில் கிடைக்கிற அனுபவங்கள் மறக்க முடியாதவையாக அமைந்து விடும்.

ஒரு பேட்டியில் கலந்து கொள்ள வந்திருந்த பெண்ணிடம், "உங்கள் கணவர் உங்களுக்குப் பணிவிடை செய்வதற்கு ஒப்புக் கொள்கிறார் என்று வைத்துக் கொள்வோம். என்னவிதமான பணிவிடையை மிக விரும்புவீர்கள்?" என்று கேட்டேன்.

அவர் சொன்ன பதில் : "தலைவாரி, பூ வைத்து விட வேண்டும்!"

"தமிழ்நாட்டில் கணவர் ஒரு கட்சியிலும் மனைவி ஒரு கட்சியிலும் இருப்பதைப் பார்த்திருக்கிறோம். அப்படி இருந்தால் கருத்து மோதல்கள் வருவதுண்டா?" என்று கேட்டபோது ஒரு இலங்கைச் சகோதரர் அளித்த பதில் :

"நான் விடுதலைப் போராளிகளை ஆதரிக்கிறேன். ஆனால் என் மனைவிக்கு அது பிடிக்காது. அதனாலென்ன?"

நம் ஊரில் டீவி அறிவிப்பாளர்கள், செய்தி வாசிப்பாளர்களின் புடைவைகளைப் பற்றி நிறைய பேசுவார்கள். நான் கூட இங்கே செய்தி படித்துக் கொண்டிருந்த காலத்தில் இதை வன்மையாகக் கண்டித்திருக்கிறேன். ஆனால் 'புடைவைப் பேச்சு' தேச எல்லைகளைக் கடந்தது என்பது இங்கே வந்த பின்தான் எனக்குப் புரிந்தது.

கனடாவில் தமிழ் மக்கள் அதிகம் இருப்பதால் அவர்களது டொராண்டோ நீதிமன்றத்தில் மொழிமாற்றுப் பணிக்காக என்னை நியமித்திருக்கிறார்கள். ஒருநாள் உணவு இடைவேளையின்போது நீதிமன்ற ஓய்வறையில் இருக்க, அங்கே வந்தார் ஒரு ஆங்கிலேயப் பெண் நீதிபதி.

"சனிக்கிழமை டீவியில் எதேச்சையாக உங்களைப் பார்த்தேன். அது என்ன உடை, அத்தனை அழகாய்?"

அது காஞ்சிப் பட்டு என்பதை விளக்கினேன்.

மறுநாள் பல்கலைக்கழக வகுப்புக்குப் போனபோது, துறைப் பதிவாளர் மைக்கேல் மொரான் என்ற ஃபிரெஞ்சுக்காரர் கையசைத்துப் புன்னகைத்தார். ஜீன்ஸும் டீஷர்ட்டுமாக இருந்த என்னைப் பார்த்துக் கேட்ட முதல் கேள்வி :

"What happened to the Saree? That was lovely!"

தொகுப்பு : சுல்லூர்

"டாக்டர் நீங்க உண்மையிலேயே டாக்டர் தானான்னு எனக்கு சந்தேகமா இருக்கு..."

"ஏன்.....?"

"மேலெல்லாம் அரிக்குதுன்னு சொன்னா கொசுக்கடிதான் காரணம்னு சொல்லிப் பிருஸ்கிரிப்ஷன் சீட்லே 'கொசுவத்தி' ஒரு பாக்கெட்'னு எழுதிக் கொடுத்திருக்கீங்களே....."

-ஜி. செல்லத்துரை





• ராவ் : முகத்தைக் கூடக் காட்டுவதில்லை!

எல்லாருடைய அறைகளுக்கும் பூட்டு மட்டும் தொங்கியது!

செயற்குழுக் கூட்டம் நடந்த அன்று மட்டும், கூட்டம் இருந்தது. உள்ளே காரசார விவாதம் நடந்ததைப் பத்திரிகையாளர்களுக்கு ஒருவர் பிடி கொடுக்காமல் விளக்கினார். ராஜேஷ் பைலட் மட்டும்தான் ராவ் தலைமைப் பதவியை விட்டுவிட வேண்டும் என்று வாதாடியிருக்கிறார். 'சரத்பவார், கருணாகரன் எல்லாம்கூட வெளியே ராவ் எதிர்ப்பைக் காண்பித்தாலும், கமிட்டிக் கூட்டத்தில் வாயே திறக்கவில்லை!' என்றார். ராவ் வெளியே வந்தவுடன், அவர் முகத்தைக்கூடப் பார்க்க முடியாமல் பாதுகாப்புப் படை சூழ்ந்துகொள்ள, காரில் ஏறிப் பறந்து விடுகிறார். கேள்வியாவது, பதிலாவது!

இதற்கு நேர்மாறாக இருக்கிறது பாரதிய ஜனதா கட்சி அலுவலகம். பரபரப்புடன் இயங்குகிறது. தலைவர்கள்-எல்.கே.அத்வானி உட்பட- எல்லாரையும் சந்திக்க முடிகிறது. ஏர்கண்டிஷன் செய்யப்பட்ட நூற்றுக்கு மேற்பட்ட நாற்காலிகள் கொண்ட 'பிரஸ் மீட்' அறை. முகம் சுளிக்காமல் பதில் சொல்லும் உதவியாளர்கள். எல்லாவற்றுக்கும் மேலாக, மூன்று மணி என்றால் டாணென்று மூன்று மணிக்குப் பத்திரிகையாளர் கூட்டத்தைத் தொடங்கி விடுகிறார் சுஷ்மாஜி!

ஆளும் கட்சியான ஜனதா தள ஆபீசைப் பார்த்தால் அழுகைதான் வரும். ஜந்தர்

# காத்து வாங்கும் காங்கிரஸ் அலுவலகம்!

ஒரு காலத்தில் தொண்டர்கள் கூட்டமும் தலைவர்களின் கூட்டமுமாகக் கலகல என்று இருந்த காங்கிரஸ் கட்சியின் 24, அக்பர் ரோடு அலுவலகம், இப்போது தூங்கி வழிகிறது. தாழ்வாரங்கள் வெறிச்சோடிக் கிடக்கின்றன. வெளியே காவலுக்கு இருக்கும் போலீஸ்காரர்கள் எண்ணிக்கை அளவுகூட, உள்ளே தொண்டர்கள் இல்லை. பூட்டப்பட்ட அறைகளுக்கு வெளியே காலி சோபாக்கள். மாட்டைக் கட்டி மேயவிட்டு, புல்வெளியைச் சரி செய்து கொண்டிருந்த தொழிலாளி மட்டும் கர்மசிரத்தையாக இருந்தார்! பின்னால் கான்டீனை நம்பிச் சில தொண்டர்கள். லைப்ரரியில் ஒரே ஒருவர். மாதவசிங் சோலங்கி, பி.பி. மௌர்யா, சுதாகர் ராவ் நாயக், அகமது படேல், ஜனார்த்தன் பூஜாரி என்று அரை டஜன் செயலர்கள்

மந்தர் சாலையில் ஒரு பழங்காலக் கட்டடம். இதில் பல கம்பெனிகள் வாடகைக்கு எடுத்திருக்கின்றன. முதல்மாடியில் நுழைந்தால், 'நிரந்தர முதல்வர்' மாதிரி, இங்கே 'நிரந்தர செயலர்' - என்.பாலகிருஷ்ணன். கேரளத்தைச் சேர்ந்தவர். கதர் சட்டை-வேட்டி. இவர் பழகாத தேசியத் தலைவர்கள் இடையாது. மௌலானா ஆசாத் காங்கிரஸ் தலைவராக இருந்தபோது வந்து சேர்ந்தவர் என்றால் பார்த்துக் கொள்ளுங்கள்! "ஏன், ஓர் எம்.பி. யாகவோ, எம்.எல்.ஏ ஆகவோ 'நீங்கள் விரும்பவே இல்லையா?'' என்று கேட்டபோது, "பதவிகள் எல்லாம் எதற்கு? டிசிக்னேஷன் போட்டுக்



• சுஷ்மா : டாண், டாண்!

கொண்டு தான் நாட்டுக்கு உழைக்கணுமா?'' என்று பதில்!

ஜனதா தள அலுவலகத்தில் சாக்கடை நீர் தேங்கி , கரடு முரடாகவும் வேறு இருப்பதால், தலைவர்கள் என்ன, தொண்டர்களைக் கூடப் பார்க்க முடியாது! இப்போது முனிசிபல் கார்ப்பரேஷன்காரர்கள், விதிகளை எல்லாம் ஒதுக்கி வைத்து, ஸ்பெஷல் கேஸாக, சுத்தம் செய்து, டிரெயினேஜ் குழாய்களை மாற்றிப் போட்டுக் கொடுக்க ஒப்புக் கொண்டிருக்கிறார்கள். லல்லு பிரசாத் யாதவ்வும், பிரதமர் தேவேகௌடாவும் வருகை தருவதற்கு முன்னால், அவசர அவசரமாகத் தரையை எல்லாம் சுத்தம் செய்து, தேங்கி நின்ற நீரை எல்லாம் அப்புறப்படுத்தினார்கள்!

பூலன்தேவியைச் சந்திக்க உத்தரப் பிரதேச பவனில் அறை எண்.226க்குச் சென்றால் ஏமாற்றம் தான் மிஞ்சும். மிர்சாபூர் எம்.பி.யான இவர், நாடாளுமன்றம் இல்லாதபோது சொந்த ஊருக்குப் போய் விடுகிறாராம். தலித் அமைப்பு ஒன்றில் ராம் விலாஸ் பாஸ்வானுக்குப் பாராட்டு விழா. இந்திய நியூஸ் பேப்பர் சங்கக் கட்டடத்துக்கு எதிரே உள்ள காஸ்மோபாலிடன் கிளப்பில் விழா நடைபெற்ற போது கணவர், குழந்தையுடன் வந்திருந்தார் பூலன் தேவி. கூட்டமான கூட்டம். பேச்சுக்களும் கோஷங்களுமாக விழா பரபரப்பாக இருந்தது. ஆனால் நெரிசலிலும் நெருக்கடியிலும் அவரை நெருங்க முடியவில்லை. கை, கால் முறியாமல், நசுங்கி விடாமல் கூட்டத்திலிருந்து தப்பி வந்தவர்கள் வெகு குறைவாகத்தான் இருக்க முடியும்!

* பூலன்தேவி : ஊருக்கு டாட்டா!



பி.கு.

தில்லியிருந்து சென்னை திரும்பும் ரெயில் பயணத்தின்போது, போபால் ஸ்டேஷனில் அதிகாலையில் தினசரிப் பத்திரிகை விற்கும் பையனிடம் கொஞ்சம் ஜாக்கிரதையாக இருக்க வேண்டும். 'தமிழக முதலமைச்சர் கருணாநிதி கடப்பட்டார்'; 'நரசிம்மராவின் புதல்வர்கள் கைது செய்யப் பட்டார்கள்!' என்று சொல்லி பேப்பரை நம்மிடம் தள்ளிவிட்டு நாலு ரூபாயோடு இறங்கிப் போய்விடுவான்! அவன் குறிப்பிட்ட செய்திகள் எதுவும் அந்தத் தினசரியில் இருக்காது என்பது ஒரு பக்கம் இருக்க, முந்தைய நாள் தில்லியில் படித்த அத்தனை செய்திகளும் அந்த மொஃபசல் எடிஷனில் இருந்து தொலைக்கும்!

புதுதில்லியிலிருந்து: **சாருகேசி**

# சுஜாதா பக்கம்



ஏ.கே. ராமானுஜனின் கவிதைகளைத் தொகுத்து ஆக்ஸ்போர்டு பல்கலைக்கழக அச்சகம் வெளியிட்டிருக்கிறது. ராமானுஜன் ஆங்கிலத்தில் எழுதிய சிறந்த இந்தியக் கவிஞராகக் கருதப்பட்டவர். அவர் 1993-ல் திடீர் என்று இறந்தபோது நாங்கள் எல்லாம் பரிதவித்தோம். அவர் கவிஞர் மட்டும் அல்ல; தமிழ் சங்கப்பாடல்களையும் ஆழ்வார் பாடல்களையும் அருமையான அறிமுகத்துடன் தேர்ந்தெடுத்து ஆங்கிலத்தில் மொழி பெயர்த்தவர். மேற்கத்திய கண்களுக்குப் புராதன இந்திய இலக்கியம், சமஸ்கிருதத்துடன் நின்று விடவில்லை என்கிற செய்தியைத் தந்தவர். இருபத்திரண்டு இந்திய மொழிகளின் நாட்டுப்புறக் கதைகளைத் தொகுத்து, எளிய ஆங்கிலத்தில் கொடுத்தவர். நவீன இந்தியக் கவிதைகளின் தொகுப்பு, பசவேசுவரர், அக்கமாதேவியின் வசனங்கள் க்ஷேத்ரய்யாவின் பாடல்கள் என்று பலவாறு அறிமுகம் செய்து மேற்கத்திய இலக்கியக் கர்த்தாக்களை, 'இதெல்லாம் உங்களிடம் இருக்கிறதா' என்று பிரமிக்க வைத்தவர்.

ராமானுஜனின் மொழி பெயர்ப்புக்கள் அத்தனை உத்தமமாக இருந்ததற்கு முதற்காரணம் அவரே ஒரு கவிஞர் என்பதே. ராமானுஜனின் சென்னை-மைசூர்-சிகாகோ வாசங்களின் பாதிப்பு மூன்று விதமான கலாசார அடையாளங்களை அவர் கவிதைகளில் பதித்திருப்பதை உணர முடிகிறது. அவர் 1993-ல் இறந்தபோது விட்டுச் சென்ற சுமார் நூறு கவிதைகளிலிருந்து புதுசாகத் தேர்தெடுத்து, பழைய தொகுப்புக்கள் இரண்டுடன் சேர்த்து வெளியிட்டிருக்கிறார்கள்.

ராமானுஜனின் ஆதாரக் கவலை, அவருடைய ஆழ்ந்த இந்திய உள்மனத்துக்கும் மேற்கத்திய வெளிப்புறத்துக்கும் உள்ள முரண்பாட்டை கவனிப்பதும் சமாளிப்பதும். அடிக்கடி இறந்து போவதைப் பற்றி, தன்னுடைய · மற்றவர்களின் இறப்பைப் பற்றிப் பேசுகிறார். ஆத்மாவின் தொடர்ச்சியைப் பற்றி அவருக்கு உள்ள சந்தேகங்கள் தெரிகின்றன.

"தற்கொலைக்கு எதிராக ஒன்று, இரண்டு அல்லது மூன்று விவாதங்கள்" என்கிற கவிதையில்:

"தற்கொலையை முயற்சிக்காதே!
நீ ஏற்கெனவே இறந்திருக்கலாம்!
கொல்வதற்கு ஏதும் மிச்சமில்லாமல்
இருக்கலாம்...
இதைவிட மோசம் சம்பிரதாயமாக இறக்கலாம் - இறந்து
டாக்டர் சர்ட்டிபிகேட்டு
களையும் மீறி
சாசுவதமாக வாழலாம்..."

என்னும்போது அவருடைய ஆத்ம சந்தேகங்கள் தெரிகின்றன.

"ஒரு பிரபலத்தை சந்தித்ததும்" என்கிற கவிதையில்

"அவன் நினைவிலிருந்து
கண்ணாடி பிம்பம் போல
விலகப் போகிறேன்....
பின் ஏன் புத்திசாலித்தனத்தைக் காட்டிக் கொண்டேன்?"

என்று தன்னைக் கேட்டுக் கொள்கிறார்.

"சில தினங்கள்" அவருக்கு

"எழுந்திருப்பது
ஒளியால் ஒரு அறை.
நடப்பது முகமிலா பரிச்சயங்களின்
குளிர்க்காற்று"

ராமானுஜனுக்கு நான் சாம்பிள் காட்டியது சின்னச் சின்ன கவிதைகளையே. அவரை முழுமையாக அறிந்து கொள்ள அவர் விட்டுப் போன சுமார் பத்துப் பன்னிரண்டு புத்தகங்களை முழுமையாகப் படிக்கும்போது அவரை இத்தனை எளிதாக இழந்துவிட்ட நம் துர்பாக்கியம் புரியும்!

கடைசியாக :

**"ஒரு நதி"**

"கோவில்களும் அவைகளைப் பாடிய புலவர்களும் இருந்த
மதுரையில்
ஒவ்வொரு கோடையும்
ஒரு நதி வரண்டு போகிறது
மார்பெலும்பு போல மணல் வரிகளும்,
வைக்கோலும் பெண்களின்
கூந்தலும்
நீர்க்கதவுகளை அடைக்க, பாலத்தின் அடியில் துருவேறி
பராமரிப்புத் திட்டுகள் தெரிய
ஈரப் பாறைகள்,
தூங்கும் முதலைகள் போல
உலர்ந்த பாறைகள்
வெயில்காயும் எருமைகள் போல.....
கவிஞர்கள் வெள்ளங்களை மட்டும்தான் பாடினார்கள்."

ராமானுஜன் என்ற பெயரில் ஏதோ இருக்கிறது!

(மீண்டும் அடுத்த வாரம்)



புத்தமதப் பிரிவுகளில் முக்கியமான ஒன்று 'ஜென்'. எதைச் செய்தாலும் அதுவாகி விடுதல் ஜென்! பின்வரும் சில கதைகள் கண்ணதாசன் பதிப்பக வெளியீடாக வந்துள்ள 'ஜென் கதைகள்' நூலிலிருந்து எடுக்கப்பட்டவை:




## வல்லமை

பங்கேய் எளிமையான ஜென்குரு. புதிராக, தத்துவமாக அல்லாமல் எல்லோருக்கும் புரியும்படி, இதயத்தைத் தொடும் எளிமையான பேச்சு அவருடையது.

வேறொரு கர்வம் கொண்ட குரு, வாதிடுவதில் வல்லவர். அவர் பங்கேயைச் சந்திக்க வந்தார்.

வந்தவர், மரியாதை கூட செலுத்தாமல், "என்னைப் பணிய வைக்க உம்மால் முடியுமா?" என்று அகங்காரத்தோடு கேட்டார்.

"இங்கே வாருங்கள், என் பக்கமாக. நிரூபித்துக் காட்டுகிறேன்" என்றார் பங்கேய்.

அவர் வந்து அருகில் நின்றார். "கொஞ்சம் இடப்பக்கம்..."

இடப்பக்கம் வந்தார்.

"இல்லை. இது சரிப்படாது. வலப்பக்கம் வந்து விட்டால் வாதம் தொடங்க வசதியாக இருக்கும்!"

அவரும் வலப்பக்கம் மாறினார். அப்புறம் பங்கேய் சொன்னார்:

"பார்த்தீர்களா? நீங்கள் நான் சொன்னபடியெல்லாம் கேட்கிறீர்கள். இப்படித்தான் நான் பணிய வைப்பது வழக்கம்!"

வந்தவர் கர்வம் அடங்கி, எதிரில் அமர்ந்தார்!

## தேடி அலையாதே!

ஜென்னுக்கு என்று தனி வழி இல்லை. வழியில்லா வழி தான் ஜென்!

குரு ஜோஷூவிடம் ஒருவர் கேட்டார்:

"எது வழி?"

"அந்த வேலிக்கு வெளியே. ஆம்! அந்த வேலிக்கு வெளியேதான்!" என்றார் குரு.

"சுவாமி, நான் அந்த வழியைக் கேட்கவில்லை. நான் கேட்டது 'பெருவழி'யை!"

"பெருவழியா? அது தலை நகருக்குப் போகிற வழி தான்!" என்றார் குரு.

குரு கேலி செய்கிறாரா?

இல்லை. எத்தனை முறை கேட்டாலும் இதே மாதிரி பதில் தான் வரும்!

வழியை ஏன் தேடுகிறாய்? எந்த வழியும் உன்னை எங்கும் கொண்டு செல்லாது. வீணே அலையாதே. இருக்கும் இடத்தில் இரு. போகிற வழியில் போ. எல்லாம் சரிதான் என்கிறது ஜென்.






## புத்தருக்கு வந்த குளிர்

அன்றிரவு கடும் குளிர். அந்த புத்த விஹாரத்தில் இருந்த ஒரு முதியவருக்குக் குளிர் தாங்கவில்லை.

அவர், கோவிலின் பல பகுதிகளிலும் இருந்த மரத்தாலான புத்தர் சிலைகளைத் தேடி எடுத்துக் குவித்து, தீ மூட்டி, குளிர்காய ஆரம்பித்தார்.

சிலைகள் படபடவென எரியும் சப்தம் கேட்டு அந்த ஆலயத் தலைமை குரு ஓடி வந்து பார்த்து, அதிர்ந்தார்.

"என்ன இது?"

"என்ன கோபம் உங்களுக்கு? என்ன நடந்து விட்டது. பாருங்கள், என் குளிரை புத்தர் போக்கிவிட்டார்!"

"என்ன உளறுகிறீர்கள்? தெய்வத்தையே இப்படி எரித்து விட்டீர்களே?"

"ஓ, அப்படியா?" என்று சாம்பலைக் குச்சியால் கிளறிப்பார்த்தார் முதியவர்.

"என்ன செய்கிறீர்கள்?"

"நான் எலும்புகளைத் தேடுகிறேன். நான் எரித்தது புத்தரையென்றால், அவரது எலும்புகள் இருக்க வேண்டுமே?"

"அடப்பாவி! இனி நீ ஒரு கணம் கூட இங்கே இருக்கக் கூடாது! போ, வெளியே!" குரு, அவரைப் பிடித்து வெளியே தள்ளி விட்டுக் கதவைச் சாத்தினார்.

மறுநாள் காலை, அந்தக் கிழவர் என்ன ஆனார் என்று பார்க்கிற ஆவலில் குரு வெளியே வந்தார். அவர் கண்ட காட்சியை, அவரால் நம்ப முடியவில்லை!

அந்தப் பெரியவர், ஒரு மைல் கல்லின் முன்னால் அமர்ந்து, காட்டுப் பூக்களை அதன் மேல் தூவி, "புத்தம் சரணம் கச்சாமி" என்று தொழுது கொண்டிருந்தார்!

குரு, "இது என்ன? மைல் கல்தான் புத்தரா?" என்று கேட்டார்.

"மரம் புத்தராகும் போது மைல்கல் ஏன் புத்தராகாது? நேற்றிரவு நான் குளிர் காய்ந்தது எனக்குள் இருக்கும் புத்தரைக் காப்பாற்றத் தான். மர புத்தர்களை எரித்ததற்காக நீங்கள் உயிருள்ள புத்தரை வெளியே துரத்திவிட்டீர்களே?" என்றார் பெரியவர்.

## உன்னை உணர்!



ஒருவர், ஜென் குருவிடம் வந்து "நான் புத்தராக வேண்டும்!" என்றார்.

குரு ஓங்கி அறைந்தார் அவரை!

கன்னத்தைத் தடவியபடியே வெளியே வந்துவிட்டவர், அங்கிருந்த ஒரு மூத்த துறவியிடம், "என்ன மனிதர் இவர்! ஒரு சாதாரண கேள்வி கேட்டதற்கு இப்படி அறைந்துவிட்டாரே! சே, இந்த குரு எத்தனை முரடு!" என்று சொல்லி வருத்தப்பட்டார்.

"அட போப்பா! எங்கள் குரு கருணையே வடிவானவர். உன்மேல் ஏராள கருணை இருந்ததால் தான் அறைந்ததோடு நிறுத்திக் கொண்டார்" என்றார்.

அந்த ஆளுக்கு ஒன்றும் புரியவில்லை. "ஏன் அடித்தார்?" என்று மறுபடியும் கேட்டார்.

"அடிக்காமல் என்ன செய்வார்? புத்தரே வந்து, 'நான் புத்தராக வேண்டும்' என்று கேட்டால் கோபம் வராதா? நீர் ஆவதற்கு ஒன்றும் இல்லை. எல்லாம் அப்படியேதான் இருக்கிறீர், புத்தராக!" என்றார் துறவி. வந்தவன் விழிப்புணர்வு பெற்றான்.



## ஓ, அப்படியா?

மாபெரும் ஜென் குருவான ஹாகுயின் ஷோயின்ஜி, ஆலயத்தில் வாழ்ந்து வந்தார். கோவிலுக்கு வந்து கொண்டிருந்த கன்னிப்பெண் ஒருத்தி, கர்ப்பமாகி விட்டாள். தப்ப வழியின்றி, தன் காதலனையும் காப்பாற்றும் பொருட்டு, "தன் கர்ப்பத்துக்கு ஜென் குரு தான் காரணம்!" என்று வீட்டில் சொல்லி விட்டாள்.

தந்தை பொங்கி எழுந்தார். ஆனால் என்ன செய்வது? பெரிய குரு ஆயிற்றே!

பொறுமையுடன் காத்திருந்து, குழந்தை பிறந்ததும் அதை எடுத்துச் சென்று குருவின் காலடியில் போட்டுவிட்டு, "இந்தா உன் குழந்தை! நீயே காப்பாற்று!" என்றார்.

"ஓ, அப்படியா?" என்று குழந்தையை எடுத் துக் கொண்டு விட்டார். இந்த விஷயம் மெல்லப் பரவி, ஊர் மக்கள் குருவை வெறுத்து ஏசத் தொடங்கினார்கள்.

அவரோ, எதுவுமே தெரியாதவர்போல, குழந்தையை வளர்ப்பதிலேயே கவனமாக இருந்தார்! பாலுக்காக வீடு வீடாகச் சென்று பிச்சை கேட்டு, எப்படியோ சிரமப்பட்டு வளர்த்து வந்தார்.

இதற்கிடையில், அதைப் பெற்றவள் இரண்டு விதமான சங்கடங்களுக்கு உள்ளானாள். ஒன்று, ஊர் போற்றிய மகானை அடியோடு சிதைத்து விட்டது. மற்றொன்று, தான் பெற்ற குழந்தையைப் பிரிந்து இருக்க இயலாத தாய்மை!

இரவு பகலாக வேதனைப்பட்டு, கடைசியாகத் தன் தந்தையிடம் சொல்லி, புலம்பி விட்டாள்.

தந்தை அதிர்ந்து போனார்!

மகளின் வாழ்க்கையை சரி செய்து விடலாம்; அவள் விரும்பியவனையே மணம் முடித்து வைத்து– ஆனால் குருவுக்குச் செய்த பாவத்துக்கு என்ன விமோசனம்!

சொல்ல முடியாத மனவேதனையுடன் ஆலயத்துக்குச் சென்றார். குருவின் காலடியில் விழுந்து புலம்பி, குழந்தையைத் தந்துவிடும்படிக் கேட்டுக் கொண்டார்.

குரு, "ஓ, அப்படியா?" என்று குழந்தையைக் கொடுத்து அனுப்பினார் சலனம் ஏதும் இல்லாமல்.

மகான்களுக்கு எல்லாம் சமம். எல்லாம் புனிதம். எல்லாம் நல்லவை!

"அந்தக் கடைக்காரருக்கு திமிர் அதிகம்னு எப்படிச் சொல்றே?"

"உங்க கடை எண்ணெய் சமையலுக்கு நல்லாயிருக்குமான்னு கேட்டதற்கு, 'உங்களுக்குகென்ன! இதெல்லாம் ஆம்பளைங்க சமாச்சாரம்'னு சொல்றார்."

- இரா. முத்துவேல்

## நீயே அறி!

ரின் சாய் சிறந்த ஜென் குருமார்களில் ஒருவர்.

அவர் ஒருநாள், பாலத்தின் மேல் நின்று, ஆற்று நீரைப் பார்த்துக் கொண்டிருந்தார். அந்த வழியாக, புத்தமதத்தின் வேறொரு பிரிவைச் சேர்ந்த மூன்று பிக்குகள் வந்து கொண்டிருந்தனர். 'ஜென்' அவர்களுக்குப் பிடிக்காது!

ரின்சாயை அடையாளம் கண்டுகொண்ட அவர்களில் ஒருவர், அருகே வந்து 'ஜென் ஆறு எவ்வளவு ஆழம்?" என்று கேலியாகக் கேட்டார்.

கண்ணிமைக்கும் நேரத்தில் ரின்சாய் அந்தப் பிக்குவைத் தூக்கினார்.

"நீயே அளந்து பார்!" என்று ஆற்றில் போட்டார்!

***(ஜென் கதைகள், வெளியீடு: கண்ணதாசன் பதிப்பகம், 12. கண்ணதாசன்சாலை, சென்னை - 17. விலை – ரூ.24)***





# பார்க் டவுன்
## பெனிபிட் பண்ட் லிமிடெட்

மத்திய அரசால் அங்கீகரிக்கப்பட்ட நிதி நிறுவனம். துவக்கம் 1985 Post Box No: 2806

★ 223, தங்க சாலை, (கந்த கோட்டம் அருகில்) பார்க் டவுன்,
சென்னை-3 போன்: 5352676, 5354354

**கிளை அலுவலகங்கள்:**

★ திருவான்மியூர், 2, கிழக்கு மாடவீதி, சென்னை-41 போன் 413582, 416417

★ அண்ணாநகர், P-995, இரண்டாவது அவென்யு, 12-வது மெயின்ரோடு ஜங்ஷன், சென்னை-40 போன் 6262656, 6280750

★ தி.நகர், 73, ரங்கநாதன் தெரு, சென்னை-600 017. போன் : 4344319

★ அம்பத்தூர், 215 ,M.T.H. Road, பஸ் நிலையம்,சென்னை-53. போன்:6357725

★ கோடம்பாக்கம், 73 & 74, ஆற்காடு ரோடு,சென்னை-600 024. போன்:4846528

**திருச்சி:** CRYSTL PLAZA 22, நந்தி கோயில் தெரு, தெப்பக்குளம். திருச்சி-620 010



## பிக்சட் டிபாசிட்

| 46 நாள் | 90 நாள் | 6 மாதம் | 1 ஆண்டு | 2 ஆண்டு | 3 ஆண்டு | 4 ஆண்டு | 5 ஆண்டு ★ |
|---|---|---|---|---|---|---|---|
| 13% | 14% | 15% | 17% | 18% | 18.5% | 19% | 20% |

## கனகதாரா டிபாசிட்

ரூ.50,000/-
முதலீடு செய்வீர்
10ஆம் ஆண்டு முடிவில்
ரூ.50,000/- பெறுவீர்
அடுத்த 20ஆம் ஆண்டு
முடிவில்
ரூ.1 கோடி பெறுவீர்

**21%** 5 வருடங்கள் ரூ.50,000/- அதற்கு மேலும்

## PB பாண்டு

| முதலீடு | காலம் | திரும்பப் பெறும்தொகை |
|---|---|---|
| ரூ.25,000 | 60 மாதம் | ரூ.70,000 |

## காமதேனு மாபெரும் திரும்பப் பெறும் திட்டம்

| டிபாசிட் திட்டம் 15 ஆண்டுகள் | 5-ம் ஆண்டு நீங்கள் பெறும் தொகை | 10ம் ஆண்டு நீங்கள் பெறும் தொகை | 15ம் ஆண்டு பெறும் தொகை |
|---|---|---|---|
| Rs.6,320 | Rs.6,000 | Rs.6,000 | Rs.56,320 |

## வெகுமதி முதலீட்டுத் திட்டம் - II

ரூ.3450/- செலுத்துவீர்.
252 மாதங்கள் நிறைவில்
ரூ.2 லட்சம் பெறுவீர்.

## செல்வக்களஞ்சியம்

| டிபாசிட் | காலம் | வருவாய் |
|---|---|---|
| Rs.7,500 | 15 Yrs | Rs.1,25,000 |
| Rs.9,000 | | Rs.1,50,000 |

## பொற்குவியல் திட்டம்

| டிபாசிட் | காலம் | வருவாய் |
|---|---|---|
| மாதா மாதம் ரூ. 100/- | 25 Yrs | Rs.3,00,000 |

**சேமிப்பு திட்டம் 10% P.a.**

## மறு முதலீட்டுத் திட்டம் !

உங்கள் தொகை 45 மாதங்களில் இரட்டிப்பு ஆகும்

| டிபாசிட் | 12 மாதம் | 24 மாதம் | 45 மாதம் | 60 மாதம் |
|---|---|---|---|---|
| Rs.1,000 | Rs.1,184 | Rs.1,430 | Rs.2,000 | Rs.2,535 |



**பென்ஷனர் நலத்திட்டம் 20% P.a.**
ரூபாய் 10 ஆயிரமும் அதற்கு மேலும்: காலம் 1 ஆண்டு
வியாபாரிகள், விதவைகள், ஊனமுற்றோர், கல்வி மற்றும் அறக்கட்டளை பயன் பெறலாம்.

**தங்க நகை கடன்**
Rs. 3,000 PER 10 GRAM
விதிகளின் பேரில் கடன் வழங்கப்படும்.
(உச்ச வரம்பில்லை)

நிர்வாக இயக்குனர்:
**Dr.P.பாலசுப்ரமணியம், B.Sc.**
முதன்மை அறங்காவலர்
கந்தகோட்டம், சென்னை - 3.

இயக்குனர் குழுத் தலைவர்:
**Dr.R. விவேகானந்தன், B.Com., M.B.A.**

❑ ரூ. 5/- செலுத்தி பங்குதாரர் ஆவீர். ❑ சேமிப்பே செழிப்புக்கு வழிகாட்டும் ❑ வெள்ளி விடுமுறை

13

மூன்று நாளாயிற்று, பால்ச்சாமி போய். இன்னும் இருபது நாட்களாகும் திரும்பி வர.

கல்கத்தாவில் அகில இந்திய ஜனநாயக வாலிபர் சங்கத்தின் அகில இந்திய மாநாடு. தமிழ்நாட்டின் பிரதிநிதிகளில் ஒருவனாக பால்ச்சாமியும் தேர்வு செய்யப்பட்டிருக்கிறான்.

அதில் பால்ச்சாமிக்கு தலைகால் புரியாத சந்தோஷம். கல்கத்தா பயணத்தில் ஏகமாய்க் குதூகலம். தரையில் கால் பாவாமல் பரவசப்பட்டுப் போய்த் திரிந்தான். சொல்லிச் சொல்லி மகிழ்ந்தான்.

'கல்கத்தா என்ன நினைக்கிறதோ, அதைத்தான் இந்தியா செய்யும்' என்று நேதாஜி சொன்னாராம். 'தங்கம் செய்யாததைச் சங்கம் செய்யும். அதையும் வங்கம் செய்யும்' என்றும் நேதாஜி சொன்னாராம். வீர பூமியாம். ஞான பூமியாம். புரட்சிகரமான துறவியாம் விவேகாநந்தரைத் தந்த பூமியாம்.

தமிழ்க் கவிதா உலகிலேயே முதன் முதலாக பெண்ணுரிமையை பிசிறில்லாமல் முழங்கியவன் மகாகவி பாரதி. அவருக்குள் பெண்ணுரிமைச் சிந்தனைச் சுடரை ஏற்றி வைத்ததே, கல்கத்தாவிலிருந்த நிவேதிதா அம்மையார்தானாம்.

'அப்பேற்பட்ட் கல்கத்தாவுக்குப் போகிறேனாக்கும்' என்று பூரித்துப் போயிருந்தான். கொதித்த பாலாய் பொங்கித் ததும்பிக் கொண்டிருந்தான். தடபுடல் ஏற்பாடுகளில் தத்தளித்தான்.

மாநாடு ஐந்து நாள்தான். மேற்கொண்டு பதினைந்து நாட்கள் சுற்றுலா. ஆக... ஊர் வந்து சேர இருபது நாட்களாகலாம். கூடவும் ஆகலாம்.

இவளையும் உடன் அழைத்தான். 'எவ்வளவோ கெஞ்சிக் கூத்தாடினான். ஒரேயடியாக மறுத்து விட்டாள்.

"நீங்களும் நானும் மட்டும்னா வாரேன். எங்க கூப்டாலும் வாரேன். முப்பது நாப்பது பேரோட சேர்ந்து பயணம்னா நா வரலை!" என்று ஒரேயடியாகச் சாதித்து விட்டாள்.

அவளது பிறவிச் சுபாவமான கூச்ச சுபாவத்தை ரொம்பத் திட்டித் தீர்த்தான், செல்லமாய்.

இவளை விட்டு விட்டுப் போவதில்



# ஆகாயச் சிறகுகள்

## மேலாண்மை பொன்னுச்சாமி

அவனுக்கு ஏகப்பட்ட வருத்தம். தயக்கம். மருகித் தவித்தான். பாக்கியத்தம்மாதான் தைரியம் சொல்லியனுப்பினாள்.

"நீ கவலையில்லாம போய்ட்டு, சந்தோஷமா வா.. பாலு. நாங்க இல்லியா? பிரேமாவை பாத்துக்கிட மாட்டோமா? தாய்க்குத் தாயாயிருந்து, அவளை புள்ளை மாதிரி கவனிச்சுக்கிடுவோம்."

அந்தத் தைரியத்தில்தான், பால்ச்சாமி புறப்பட்டான். அவன் போய் மூன்று நாளான பிறகுதான், அந்தப் புயல் நிகழ்ந்தது.

**வீ**டு வீடாய் குடும்ப அட்டைகள் விநியோகித்தார்கள். புதிய குடும்ப அட்டைகள். புதுப்பிக்கப்பட்ட ரேஷன் கார்டுகள்.



அதில் ஏகப்பட்ட விடுதல்கள். நிறைய குடும்பங்களுக்கு அட்டைகள் வழங்கவில்லை. விடுபட்ட கணக்குகளாய் - பிரஜா உரிமையை இழந்த அகதிகளாய் - தவித்த குடும்பங்கள். கொடுக்கப்பட்ட அட்டைகளிலும் ஏகப்பட்ட குளறுபடிகள். சில அட்டைகளில் உயிருடனிருக்கும் பிள்ளைகளைக் கொன்றிருந்தார்கள். வயதுகளை தாறுமாறாக்கியிருந்தனர். சில குடும்பத் தலைவர்களின் பெயர்களையே காணவில்லை. தொலைக்கப்பட்டு விட்டார்கள்.

இன்னும் சில அட்டைகள் ஒரே கோமாளிக் கூத்தாக இருந்தன. தகப்பன் வயது 12 என்றிருந்தது. பிள்ளையின் வயது 42 என்றிருந்தது.

பிரேமாவுக்குள் பயங்கரச் சோர்வு. பால்ச்சாமி தொலைதூரத்துக்கு - நீண்ட இடைவெளியில் போயிருக்கிறான் என்ற நிஜத்தின் அழுத்தத்தை ஒப்புக் கொள்ள மறுக்கிற அயற்சி. வீட்டுக்குள் வேலையுமில்லை. ஏதோ வீட்டு வேலைகள் பூராவுமே பால்ச்சாமிக்கே நிகழ்ந்து கொண்டிருந்த மாதிரி தெரிகிறது.

அவன் இல்லை என்றவுடன் சட்டி, பானை கழுவத் தோன்றவில்லை. ஆசை ஆசையாய் யோசித்து, அக்கறையாய் சமையல் செய்கிற மனசில்லை.

'நமக்கு மட்டுந்தானே? கெடக்கட்டும். பழைய சோறே போதும். ஊறுகாய் இருக்கு. பாத்துக்கலாம்' என்கிற அசிரத்தை. வந்து அமுக்குகிற அசமந்தம். செயலற்ற தன்மை. இயல்பான ஓர் இழையோட்டம் அறுபட்டுப் போன மாதிரி ஓர் எரிச்சல். எதையோ பறித்துக் கொண்ட மாதிரியோர் வெறுமை. காரணமற்ற கோபமும் குமைச்சலும் திசையில்லாமல் உள்ளுக்குள்ளேயே முட்டி மோதியது.

ரெண்டு மூன்று மாசங்களுக்குப் பிறகு, அவளுள் தலைநீட்டிய பழைய வெறுப்பு. 'கட்சி, கட்சின்னு ஒரே கிறுக்காய்த் திரியுறாரே. நல்ல மனுசர்தான். அவரை இந்தக் கட்சிப் பேய்தான் ஒரு மோகினிப் பிசாசு மாதிரி பிடிச்சாட்டுது. அந்த மோகினிப் பிசாசுதான் இப்ப அவரைப் புடுங்கிக்கிட்டுப் போயிருக்கு.'

தன்னைப் பெண் பார்த்து விட்டுப் போன அன்றைக்கு.... கல்யாணத்துக்குக் குறுக்கே மறித்து நின்ற அண்ணன் ஞாபகம் வந்தது. அவனின் கோபக் கத்தல். "கட்சி கட்சின்னு ஊர்க்காடு கத்தத் தெரியும். மைக்கைக் கண்டுட்டா, தண்ணி குடிக்காமப் பேசத் தெரியும். வேறென்ன தெரியும், இந்த ஆளுக்கு?" என்று கூவல்க்காடு போட்ட அண்ணன்.

அவன் சொன்னது சரியாய்ப் போயிற்று. அதுவே நடப்பாகிப் போயிற்று. அவளுக்குள் கப்பிக் கொண்ட ஒரு சோகம்.

அண்ணனை வெட்டிப் பேசிய அம்மா. "ஒந்தங்கச்சி கெட்டிக்காரியாயிருந்தா, புருஷனை கைக்குள்ளே போட முடியாதா? வசக்கிக் கட்டுப்படுத்தக் கூடாதா? 'ஊரு, கட்சி'ன்னு திரியுற மாப்புள்ளையை 'வீடு புருசை'ன்னு திரியுற மாதிரி அக்கறையாக்க முடியாதா?"

அம்மாவின் நம்பிக்கை. ஓர் ஆண் மகனை தாம்பத்திய உலைக்களத்தில் வார்த்து, புது மனிதனாக படைக்கும் ஆற்றல் ஒரு பெண்ணுக்கு உண்டு என்கிற அனுபவப் பாடத்தில் வந்த நம்பிக்கை. அம்மாவின் வைர நம்பிக்கை. அந்த நம்பிக்கையை பொய்யாக்கி விட்டோமே என்கிற பிரேமாவின் உளைச்சல். கெட்டிக்காரியாயில்லாமல், பால்ச்சாமியிடம் மயங்கிப் போன பலவீனமாய் தான் சிறுமைப்பட்டிருக்கிற நிஜம்.

பிரேமாவுக்குள் உளைச்சலான நினைவுகள். தகிக்கும் தனிமையில் குஞ்சு பொறிக்கும் முன் நினைவுகள். ஒன்றைத் தொட்டு ஒன்றாக, முடிவற்றுத் தொடர்கிற நினைவுகள். அனுமான் வால் நினைவுகள்.

அனுமான் வாலை அறுக்கிற மாதிரி பாக்கியத்தம்மா அலறிக் கொண்டு வந்தாள்.

"என்னம்மா...."

"இந்தக் கொடுமையை கேப்பாரில்லையா? எனக்கு ரேஷன் கார்டு இல்லாம ஆக்கிட்டாகளே... பாவிப் பயக!"



# 15 வருடங்களாக நீங்கள் அளித்து வரும் ஆதரவிற்கு நாங்கள் தரும் பரிசு !




மங்கள்தாரா - உங்கள் விருப்பப்படி பின்தேதியிட்ட காசோலைகள் மூலமாகவோ, வட்டி உத்திரவாத பத்திரங்கள் மூலமாகவோ உங்களுக்கு வட்டித் தொகையை உறுதி செய்கிறது

# 22% + 2% ஊக்கத் தொகை

குறைந்தபட்ச முதலீடு
ரூ. 10,000
ஒரு வருடத்திற்கு.

மேலும் விவரங்களுக்கு கீழ்கண்ட முகவரியில் தொடர்பு கொள்ளவும்:

**சுமங்கல் ஜுவல்லர்ஸ்**

114, உஸ்மான் சாலை, தி.நகர், சென்னை - 600 017.

போன் : 434 0122 / 434 4964 / 434 9617



''எதிர்க்கட்சித் தலைவர் எனக்கு தொலை நோக்குப் பார்வை இல்லை என்று சொன்னதை நான் ஆட்சேபிக்கிறேன்.''

– ஜூனியர் தேஜ்

---

"அப்படியா?"

"இங்க பாரு... கூலிக்கு ஒழைச்சு வவுத்தை நனைக்குறோம். அரிசி வெலை யானை வெலை விக்குது. இந்தக் கொடுமையிலே ரேஷன் கடைக் கார்டு இல்லாம... நாங்க எப்படி ஜீவனம் பண்றது?"

"ஏன்... நீங்க கேக்கலியா?"

"கேட்டேனே. இல்லேன்னு கை விரிச்சுட் டாங்களே.... நாங்க என்ன செய்ய முடியும்னு ஒதறிட்டுப் போய்ட்டாங்களே..."

"ம்... பெறகு?"

"இன்னும் ஏழு நாள்லே ஏற்பாடு பண்ணு னாத்தான்... ரேஷன் கார்டு கெடைக்குமாம். இல்லேன்னா... நெரந்தரமா இல்லாமப் போயி ருமாம்!"

பாக்கியத்தம்மாவின் பேச்சே பாதி ஒப்பாரி யாக இருந்தது. ஏழ்மையின் கடைசிக் கவளமும் இல்லாமல் போன அவலத்தின் சோகம்.

பிரேமாவுக்கு என்ன சொல்வது என்று புரியவில்லை. எப்படி ஆறுதல் சொல்ல? என்ன வார்த்தை சொல்ல? அடிபட்ட சிறுமி யாய் ஆதரவுக்கு அழுகிற பாக்கியத்தம்மாவை எப்படித் தேற்ற?

திகைப்பில் எல்லா வார்த்தைகளும் ஓடி ஒளிந்து கொண்ட மாதிரியிருந்தது. மொழியே மறந்து போன மாதிரி ஒரு தவிப்பு. இரக்க மாய்ப் பார்த்தாள். மலட்டுக் கருணை. கையறு நிலையில் வருகிற பரிதாப உணர்வு. இயலா மையின் மூச்சு முட்டல்.

''ஏம்மா... ஏதாச்சும் ஏற்பாடு பண்ண னுமே?'' புகலற்றுப் போன அவலத்தில் பாக் கியத்தம்மா.

''நா என்ன செய்ய முடியும்? அவரு இருந்தா... ஏதாச்சும் செய்வாரு...''

''பால்ச்சாமி வர்றதுக்கு இன்னும் இருவது நாளாகுமே. ஏழு நாளைக்குள்ளே ஏற்பாடு பண்ணலைன்னா... என்னென்னைக்கும் இல் லேன்னு போயிருமே. ஏங்குடியே முழுகிப் போகுமே...''

அதற்குள் ஏழெட்டுப் பேர்கள் வந்து விட்டனர்.

"பால்ச்சாமியண்ணாச்சி இல்லியா?"

"அந்தத் தம்பி எங்க?"

"கொழுந்தனாரு இருக்காகளா?"

"அக்கா, மச்சான் வீட்லே இல்லியா?"

ஆளுக்கொரு கேள்வியோடு வந்த பெண் கள். பிரேமா வீட்டில் மாநாடு போலக் கூட் டம். எல்லாப் பெண்களுக்கும் குடும்ப அட்டைகள்தாம் பிரச்னை. ஆத்திரமும் ஆங் காரமுமாய் அங்கலாய்க்கிற பெண்கள். பிரே மாவால் உதவி செய்ய முடியும் என்கிற ஒரே நம்பிக்கையில் வந்திருக்கிற பெண்கள்.

பிரேமாவுக்குள் திகைப்பு. மருட்டல். எதுவும் செய்ய முடியாத இவளது நிலைமை. இயலாமை. ஏதாச்சும் உடனடியாகச் செய்தா கணும் என்கிற தவிப்பிலும் துடிப்பிலும் பெண்கள்.

வீடு முழுக்கப் பேச்சுச் சத்தம். பெண் களின் புலம்பல் சொற்கள். வீட்டின் உள்பக்கம் முழுவதும் கொதிநிலை உணர்ச்சியின் அலை பாய்ச்சல்கள். எல்லா அலைகளின் வெக்கை யும் 'என்ன செய்ய?' என்ற கேள்வியில் வந்து முட்டி மோதித் திகைத்தது.

அந்தத் திகைப்பை பாக்கியத்தம்மாதான் அடித்து நொறுக்கினாள்.

"வாங்கடி... நாமளா தாலூகாபீஸ்லே போயி ஞாயம் கேப்போம்!"

"பொம்பளைக நாம. நம்மாலே எப்படி முடியும்?"

"ஏன் முடியாது? ஆம்பளையாலே முடி யாத காரியங்களையெல்லாம் பொம்பளை நினைச்சா சாதிச்சுக் காட்டிரலாம். போவம். நம்மளை என்ன கடிச்சு முழுங்கிரவா செய் வாக?"

"யாருகிட்டே போய் ஞாயம் கேக்குறது? என்ன ஏதுன்னு ஒண்ணும் தெரியாதே..."

"மொதல்லே போவம். போகப் போகப் பாதை தெரியாமலா போயிரும்?"

பாக்கியத்தம்மாவின் துணிச்சல், ஒரு காற்று மாதிரி, மனசுக்குள் கனலும் தீப்பொறிகளை ஊதுகிறது. ஊதி ஊதிப் பெருக்குகிறது. ஒரு பெரும் தீயாக்குகிறது.

"வா... பிரேமா, போவம் நாம!"

அதே வேகக் கத்தலில் பிரேமாவையும் கூப்பிடுகிற பாக்கியத்தம்மா. பதறித் துடிக்கிற பிரேமா. வெட்டுப்பட்ட பல்லி வாலாய் துடித் தாள்.

"ஐய்யோ! நானா? அங்கேயெல்லாமா? நா செத்தாலும் வரவே மாட்டேன்."

"சும்மா... வாம்மா. பயப்படாதே. முன் னாலே போக வேண்டாம்மா. கூட்டத்தோட கூட்டமா ஊடாலே வாம்மா. கூச்சப்பிட்டா தேம்மா..."

"ஐய்யோ... நா வரலே... நா எதுக்கு?"

"பால்ச்சாமி ஊரறிஞ்ச தலைவரு. அவரு பேரைக் கேட்டா ஆபீஸருங்களே பயப்படு வாக. அவரு பொஞ்சாதி எங்க கூட வந் தாலே... ஒரு தைர்யம் வரும் எங்களுக்கு."

பிரேமா மறுக்கவும் முடியாமல், ஒப்புக் கொள்ளவும் முடியாமல் தவித்தாள்.

(தொடரும்)



1996 ஜூலை 7
தாது ஆனி 23
மலர் : 54
இதழ் : 49

# கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.



## கன்ஷிராம் விரித்த மாயவலை!

அதிர்ந்து போயிருக்கிறது ஐக்கிய முன்னணி. உத்திரப்பிரதேச சட்டசபைத் தேர்தல்களில் பகுஜன் சமாஜ் கட்சியுடன் காங்கிரஸ் கூட்டு சேர்ந்திருக்கிறது! இது நூறு சதவிகிதம் சந்தர்ப்பவாதக் கூட்டணி என்பது ஐக்கிய முன்னணிக்குப் புரிகிறது. எனினும், அதிலுள்ள எந்தவொரு கட்சித் தலைவரும் நரசிம்மராவை விமர்சிக்கத் தயாராயில்லை. கண்ணாடி வீட்டில் இருந்து கொண்டு கல் வீச முடியாது என்பதை உணர்ந்து மௌனம் சாதிக்கிறார்கள்.

உ.பி.யில், பி.எஸ்.பி. - காங்கிரஸ் கூட்டு சேர்வதால் மத்திய அரசுக்கு உடனடியாக ஆபத்து ஏதும் வந்துவிட முடியாதுதான். ஆனால், காங்கிரஸ் தனது ஆதரவைப் பின்வாங்கிக் கொள்ள, மத்திய அரசு கவிழும் அபாயமானது, கழுத்து முனை கத்தியாகத் தொடர்ந்து கொண்டேதானிருக்கும். அந்த அச்சுறுத்தல் நிஜமாகி, மீண்டும் தேர்தல் நடக்கும் சந்தர்ப்பத்தில், காங்கிரஸின் கை ஓங்கித்தானிருக்கும்.

உத்திரப் பிரதேசத்தில், 425 இடங்களுள் 300 இடங்களை பி.எஸ்.பிக்குக் கொடுத்து விட்டு 125 இடங்களில் மட்டுமே போட்டியிட ஒப்புக் கொண்டுள்ளது காங்கிரஸ். மாயாவதியை முதல்வராக்கச் சம்மதித்திருக்கிறது! விரைவில் வரக்கூடிய நாடாளுமன்றத் தேர்தலை மனத்தில் கொண்டுதான் இவ்வளவு பெரிய சமரசத்துக்குக் காங்கிரஸ் உடன்பட்டிருக்கிறது. நாடாளுமன்றத் தேர்தலுக்கான தொகுதிப் பங்கீட்டைக் கூட இப்போதே இரு கட்சித் தலைவர்களும் ரகசியமாக முடிவு செய்து வைத்திருந்தாலும் வியப்பதற்கில்லை.




ஆனால், காங்கிரஸ், மத்தியில் ஆட்சியைப் பிடிக்கும் ஒரே நோக்குடன் இதே போல் ஒவ்வொரு மாநிலத் தேர்தலிலும் அதிகமான இடங்களை விட்டுக் கொடுத்து, கொள்கைகளிலும் சமரசம் செய்து கொண்டு கூட்டணி அமைத்துப் போட்டியிடுவது, அக்கட்சியின் வீழ்ச்சிக்கே வழிவகுக்கும்.

தமிழகத்தில், காங்கிரஸ் தனித்துப் போட்டியிடவே முடியாத நிலை உருவாகி, இறுதியில் தாய்க் கட்சி அழிந்தே போய், அதனிடத்தில் மாநிலக் கட்சி உருவாகி விட்டது. இந்தப் போக்கு உ.பி. போன்ற இதர மாநிலங்களிலும் விரைவில் தொடரும்.

இவ்வாறு மாநிலங்களில் மெள்ள மெள்ள பலவீனப்பட்டுப் போகும் ஒரு கட்சி, மத்தியில் மட்டும் பலத்துடன் இயங்குவதென்பது வெகு நாட்களுக்குச் சாத்தியமில்லை.

இந்திரா காந்தி தொடங்கி, அடுத்தடுத்து காங்கிரஸின் தலைமைப் பொறுப்பை ஏற்ற தலைவர்கள், கட்டிய வீட்டை உடைப்பது போல் காங்கிரஸ் கட்சியைத் தகர்த்து தூள் தூளாக்கி வருகிறார்கள். அதிகார பலம் என்ற சுயநலத்துக்காக ஒரு ஸ்தாபனம் மீண்டும் காவு கொடுக்கப்பட்டிருப்பதைத்தான் உ.பி.யில் பார்க்கிறோம்.

## ஹெக்டே தூண்டிலில் சிக்கிய கௌடா!

'ராஷ்ட்ரீய நவநிர்மாண் வேதிகே'! - "இது அரசியல் கட்சியல்ல; சமுதாய நல அமைப்பு" என்கிறார் ராமகிருஷ்ண ஹெக்டே. 'அவசியம் ஏற்படும் நேரத்தில் அந்த அமைப்பே அரசியல் கட்சியாக அவதாரம் எடுக்கும்' என்பதையும் அதே மூச்சில் சொல்கிறார் ஹெக்டே! 'அவசியம் ஏற்படும் நேரத்தில்' என்ற சொற்களை 'தேர்தல் அறிவிக்கப்படும் சமயத்தில்' என்று திருத்தி வாசித்துக் கொள்ள வேண்டும்!




ஹெக்டே ஆரம்பித்துள்ள புதிய அமைப்பினால் ஜனதா தளத்துக்கு விளைந்துள்ள அபாயம் கணிசமானது. புதிய பிரதமர், பழைய பிரதமரின் (ராவ்) நிதானத்தில் பாதியையேனும் பெற்றவரா யிருந்தால் ஹெக்டேவைக் கட்சி நீக்கம் செய்து இப்படியொரு சிக்கலை உருவாக்கியிருக்க மாட்டார்.

'ஐக்கிய முன்னணி ஒரு சந்தர்ப்பவாதக் கூட்டணி' என்று உண்மை பேசினார் ஹெக்டே. தொடர்ந்து, கௌடா பேரிலிருந்த பழைய ஊழல் குற்றச்சாட்டுகளை (கர்நாடகா மாநில அரசு தொடர்பானவை) தூசி தட்டி எடுத்து, மீண்டும் செய்தியில் அடிபடச் செய்தார்.

தேவேகௌடா பேசாமல் மௌனம் சாதித்திருந்தால், ஹெக்டே எழுப்பிய எதிர்ப்புக் குரல் தானாக அடங்கிப் போயிருக்கும்.

ஆனால், 'கட்சி என் மீது ஒழுங்கு நடவடிக்கை எடுத்தால் எடுக்கட்டுமே!' என்று ஹெக்டே மேலும் தூண்டும் விதமாகப் பேச, அந்தத் தூண்டிலிலேயே சிக்கிக் கொண்டு விட்டார் தேவே கௌடா.

கட்சி நீக்கம் செய்யப்பட்டதால் முன்னிலும் பலமாக எதிர்ப்பது ஹெக்டேவுக்குச் சுலபமாகி யிருக்கிறது. கர்நாடகத்தின் முதல்வர் படேல், தமது ஆதரவாளர் என்பது ஹெக்டேவுக்கு மிகவும் சாதகமாக இருந்து வருகிறது.

ஹெக்டே டி.விக்கு அளித்த பேட்டியைத் தணிக்கை செய்தது போன்ற சிறுபிள்ளைத்தன மான நடவடிக்கைகளால் தம்மை மேலும் பலவீனப்படுத்திக் கொண்டிருக்கிறார் தேவே கௌடா.

ஜனதா தள கட்சித் தலைவர் லல்லு பிரசாத் யாதவ் தொடங்கி, பொம்மை, ஷரத் யாதவ் (செயல் தலைவர்) என அனேகர் மீது ஊழல் குற்றச்சாட்டுகள் வேறு அடுக்கடுக்காக இருக் கின்றன.

இந்நிலையில் கர்நாடக ஜனதா தளத்தில் பிளவைத் தூண்டும் விதமாக நடந்து கொண்டு, கட்சியைப் பெரும் சோதனைக்கு உட்படுத்தியுள்ளார் பிரதமர்.



அசார்.

# "தலைமை தாங்கத் தகுதி இல்லை!"

நடந்து கொண்டிருக்கிற, இந்திய கிரிக்கெட் அணியின் இங்கிலாந்து சுற்றுப் பயணம், நமக்கு வடிகட்டின, சுத்தமான, மொத்தமான தோல்வியை வாங்கித் தருவது ஏறக்குறைய உறுதியாகி விட்டது. இந்திய அணியின் இத்தனை மோசமான ஆட்டத்துக்கு முழுப்பொறுப்பேற்கவேண்டிய கேப்டன் அசாருதீன், தொடர்ந்து பதவியில் இருப்பதோடு அணியின் மேனேஜர் சந்தீப் பாட்டீலின் பரிபூரண ஆசியுடன் கிரிக்கெட் ரசிகர்களின் வயிற்றெரிச்சலைச் கொட்டிக் கொள்ளும் முடிவுகளையும் (சித்து, பிரபாகர் விவகாரம் போல) எடுத்துக் கொண்டு இருக்கிறார்.

சில இளம், தீவிர கிரிக்கெட் ரசிகர்கள், 'இது பொறுப்பதில்லை' என்று நம்மிடம் குமுறினார்கள். அசாருக்கு கல்தா கொடுத்தே ஆக வேண்டும் என்றார்கள்.

'ரசிகர்களின் கருத்து இப்படியாக இருக்கிறதே, உங்கள் கருத்து என்ன?' என்று இங்கே இருக்கும் சில கிரிக்கெட் ஜாம்பவான்களிடம் கேட்ட போது, அம்மா ஆட்சியில் அமைச்சர்கள் போல, ஒருத்தரும் வாயைத் திறக்கவில்லை. (ஒருவர் தவிர! காண்க பெட்டிச் செய்தி.) இனி இளைஞர்களின் கருத்துக்கள்:

**சுவாமிநாதன் :**

"நம்ப டீமிலேயே டெண்டுல்கர், சித்து ஆகிய இரண்டு பேர்தான் அணிக்கு ரெண்டு கைகள் மாதிரி இருக்கிறவங்க. அதிலே ஒண்ணு உடைஞ்சதுக்கு அசார் ஒரு முக்கியக் காரணம். சித்து விலகினப்புறம் கூட அவருக்கு எதிராகவே தன் கருத்துக்களை அசார் சொன்னதிலேயே அவருடைய பங்கு புரிகிறது. அரவணைத்துக் கொண்டு போகும் தன்மை இல்லாதவர் கேப்டனாக இருக்கத் தகுதியில்லாதவர். எனவே அசாருதீன் கேப்டன் பதவியை உதற வேண்டும். அனில் கும்ப்ளே அந்தப் பதவிக்கு ஏற்றவர்."

**வித்யா லட்சுமி :**

'கேப்டனாக நியமிக்கப்பட்ட ஆரம்ப கட்டத்தில் அசாருதீன் மின்னவில்லை. நடுவில் அந்தக் கலையில் அவர் தேர்ந்தது உண்மை தான். இப்போது மீண்டும் சறுக்கல். ஒருவித 'டாமினேஷன்' மனப்பாங்கு அவரிடம் வளர்ந்திருக்கிறது என்று தோன்றுகிறது.

எப்போது அணியினருக்குள்ளேயே அவரைப் பற்றி, ஆழமாக இரண்டுவித கருத்துக்கள் தோன்றிவிட்டதோ, அவர் (பதவி இறக்கம் செய்யப்படுவதற்கு முன்) தானாகவே இறங்கி

---

**முன்னாள் ரஞ்சி வீரர் வி. ராமநாராயணன் கூறுகிறார் :**



"அசார் ஒரு நல்ல மனிதர். நல்ல நண்பர் ஆனால் நல்ல கேப்டன் இல்லை என்பதை சமீப காலமாக நிரூபித்து வருகிறார். இங்கிலாந்துடனான இரண்டு டெஸ்டிலுமே நாம் ஜெயித்திருக்க முடியும். போலர்களுடன் அவர் கலந்து பேசி ஃபீல்டிங் செட் பண்ணுவதே இல்லை! டீவியில் - நான் பார்த்தவரை - அசார் கண்ணிலேயே படவில்லை! ஒரு கேப்டன் இப்படி இருந்தால் எப்படி? தவிர மாம்ப்ரேவை அணியில் அவர்

விடுவதுதான் நல்லது. இனியும் அவரது தலைமை தொடர்ந்தால் இந்திய கிரிக்கெட் பாதாளத்துக்குப் போக வேண்டியதுதான்."

**சுனில் சங்கர் :**

"ஒரு டுரை வைத்துக் கொண்டா - அதன் முடிவை மனத்தில் கொண்டா இப்படி ஒரு பெரிய விஷயத்தைத் தீர்மானிப்பது? அசாருதீன் இப்போது குழப்பத்தில் இருப்பதற்குக் காரணம் அவரது அந்தரங்க வாழ்வை அளவுக் கதிகமாக விமர்சித்த பத்திரிகைகள்தான் என்று நினைக்கிறேன். இந்த டென்ஷன் குறைய, இந்த சீசனுக்கு மட்டும் அசாருதீனை கேப்டன் பதவி யிலிருந்து தள்ளி வைக்கலாம். அந்தக் கால கட்டத்தில் தன் மன இறுக்கங்களைத் தீர்த்துக் கொண்டு வந்து, புத்துணர்ச்சியோடு மீண்டும் கேப்டனாகி இந்தியாவுக்கு மேலும் பல வெற்றி களை அவர் பெற்றுத் தருவார் என்பது என் எண்ணம்."


• வித்யா லட்சுமி


• சுவாமிநாதன்

• சுனில் சங்கர்


• ஆர்த்தி


• ராம்ஜி

**ஆர்த்தி :**

"நிறையப் பந்தயங்களை இந்திய அணி அசாருதீன் தலைமையிலேதான் ஜெயித்திருக் கிறது. எப்படி ஜெயிச்சது? எல்லாம் நம்ம நாட்டிலேயே ஆடப்பட்ட மேட் சுகள். இங்கிலாந்து, ஜிம்பாப்வே மாதிரி சாதா டீம்களுடன் நான் மோதினோம். அதுவும் லோக்கல் டீமிட மெல்லாம் அடி வாங்கியிருக்கிறோம். விளையாட்டில் வெற்றி தோல்வி சகஜம்தான். ஆனா தோல்வியே சகஜ மாயிடக் கூடாது இல் லையா? மனைவியை விவாகரத்து செய்த திலே ஏற்பட்ட மனக் குழப்பமாம். இதற் கெல்லாம் பலியாக நம்ம அணிதான் கிடைத்ததா? கேப்டன் பதவியி லிருந்து மட்டுமல்ல, தனது பேட்டிங் கிலும் தொடர்ந்து ஏமாற்றத்தை அளித்து வரும் அவர், இந்திய அணியி லிருந்தே விலகுவதுதான் சரி."

**ராம்ஜி :**

"ஒரு கேப்டன் என்பவர் தன் அணியின ரால் மதிக்கப்படுபவராகவும் அன்பு செலுத் தப்படுபவராகவும் இருக்க வேண்டும். பல்வேறு பத்திரிகைச் செய்திகளைப் படித்தால், அணி யினரின் கருத்துக்களுக்கு முக்கியத்துவம் கொடுக்காதவர் அசாருதீன் என்றே படுகிறது. தவிர, தலைமைப் பதவி என்ற சுமையால்தான் இப்போதெல்லாம் அசாருதீன் சரியாக ஸ்கோர் கூட எடுப்பதில்லை. சச்சின் டெண்டுல்கரை அந்தப் பதவிக்கு நியமித்தால், சுமை நீங்கிய தெம்போடு அசாருதீன் மீண்டும் அற்புதமான பேட்ஸ்மேனாகப் பரிமளிக்க நிச்சயம் வாய்ப்பு உண்டு!

**— ஜி.எஸ்.எஸ்.**

அட்டை (அஸார்) வண்ணப்படம் : **சாரி**

படங்கள் : **பேஜர் கே. மூர்த்தி**

சேர்த்தது தவறு. வேறொரு ஸ்பின்னர் போட்டிருக்கலாம்.

சித்து விவகாரத்தை எடுத்துக் கொள்வோம். யார் பக்கம் சரி, யார் தவறு செய்தது என்பதையே விட்டு விடுவோம். ஒரு நல்ல கேப்டன், இது போன்ற பூசல்கள் வெளியே தெரியும்படியா வைத்துக் கொள்வது? அசார் தமது தகுதியின்மையை இதிலேயே வெளிப்படுத்தி விட்டார். அவர் கேப்டன் பதவியிலிருந்து விலக வேண்டி யது மிக அவசியம், நம் டீமுக்கு.

அடுத்தபடியாக டெண்டுல்கரைத்தான் போடுவார்கள். சின்ன வயதில் அத்தனை சுமை அவருக்குத் தாங்குமா என்று கருதுகிறபட்சத்தில் கும்ப்ளே தகுதியானவர் என்பது என் கருத்து!"

◆ பிரதமர், முதல்வர் முறையே உதிர்த்த உறுதிமொழிகள், பொன்மொழிகளுக்குச் சரியான விளக்கம் தந்து உருவாக்கப்பட்ட தலையங்கங்கள் மத்திய, மாநில அரசுகட்குக் கிடைத்த அற்புதமான ஆலோசனைச் சுரங்கங்கள்!

இனாம் மணியாச்சி, எஸ்.ஏ. கேசவன்.

◆ பொதுவாகவே உயர் அதிகாரிகளும் காவல் துறையினரும் ஆளுங்கட்சியின் கைப்பாவையாகவே செயல்பட வேண்டியதாயிருக்கிறது. இவர்கள் சுதந்திரமாக இயங்க அனுமதிக்கப்பட்டால் நல்லாட்சி அமைய வாய்ப்பு அதிகம். இதற்குக் கட்சித் தலையீடற்ற ஆட்சி அவசியம். எனவே, ''கட்சித் தலையீடே ஆட்சியின் அழிவுக்கு ஆரம்பம்'' என்று நீங்கள் குறிப்பிட்டிருப்பதை பொன்மொழி என்பதைவிட ''வைரமொழி'' என்றே சொல்லலாம்.

தஞ்சாவூர், வெ. முருகானந்தம்.

◆ இந்த வாரக் கல்கி, 'சசி எதிர்ப்பு ஸ்பெஷ'லாக தூள் கிளப்பியது. அதிலும் 'டப்பு.... டப்பு' பதில் டாப்பு.... டாப்பு!

பழனி, கீதா மருதநாயகம்.

◆ நமது 'அம்மாவை'ப் போல் இல்லாமல், மியான்மர் மக்களின் நலனுக்காகப் பாடுபட்டு வரும் ஸீகி போன்ற பெண்கள், பெண் குலத்திற்கே பெருமை!

மாப்பிள்ளைக்குப்பம், கி. இளம்பரிதி.

◆ ஜி.எஸ். பாலகிருஷ்ணனின் ''கணக்கோ கணக்கு'' ஹாஸ்யக் கட்டுரை ரசிக்கும்படி இருந்தது. அதென்னவோ தெரியவில்லை. இந்த ஆட்சி மாற்றத்துக்கு முன்பு இது போன்ற கற்பனைக் கட்டுரைகள் அவ்வளவாக வெளி வரவில்லை. ஆட்டோக்கள் வந்துவிடும் என்ற அச்சம் கூடக் காரணமாக இருந்திருக்கலாம்!

மதுரை - 14. கோமதி மணாளன்.

◆ முன்னாள் பிரதமர் வாஜ்பாயின் நேரம் தவறாமை, எளிமை, நிருபர்களை அணுகும் விதம், கலைஞரைச் சந்தித்த பண்பாடு, பொது மேடையில் கொள்கைகளைத் தெளிவாக்கும் பாங்கு இவற்றைப் படித்து, ஒரு நல்ல, திறமையான பிரதமரை இழந்து விட்டோமோ என்று நினைத்துக் கொண்டிருந்தால், 'டிசம்பர் ஆறாம் தேதி அயோத்தி சம்பவம் நடந்தது தவறல்ல என்றும் பலர் நினைக்கிறார்கள்' என்ற சுஷ்மா ஸ்வராஜின் பேச்சு, அந்த நினைப்பிற்குத் தடை போட்டது! தவறான இடத்திலிருக்கும் சரியான நபர் என்ற கூற்றை வாஜ்பாய் மறுத்தாலும், சுஷ்மா போன்றவர்கள் சரிதான் என்பதை நிரூபித்துக் கொண்டிருக்கிறார்கள்!

கள்ளிப்பாடி. கே. ஸ்டாலின்.

◆ அரசியலும் ஆன்மீகமும் ஒன்று சேருவதால் ஒரு கோயிலுக்கு எந்த அளவிற்குப் பெருமை சேருகிறது என்பதற்கு திருவக்கரை கோயில் நல்ல உதாரணம். அரசியல் புள்ளிகள் அடிக்கடி திருவக்கரை கோயிலுக்குச் செல்லுவதால் பத்திரிகைக்கு செய்தி கிடைக்கிறது. வாசகர்களாகிய எங்களுக்கு தல வரலாறு கிடைக்கிறது. ஆக ஒரு கல்லில் இரண்டு மாங்காய். பலே.

லால்குடி. எம். இராஜேந்திரன்.

## ரூ. 20 பரிசுக் கடிதம்

◆ **கம்யூனிஸ்ட்கள் ஊர்வலம் சென்றால் போலீஸ் பாதுகாப்பு என்பது தேவையற்றது. ஏனென்றால் அந்த அளவிற்குக் கட்டுப்பாட்டுடன், அவர்களுக்கே உரித்தான கண்ணியத்துடன் நடந்து கொள்வார்கள். பொதுச் சொத்துக்களுக்கு எந்த பாதிப்பும் வராது என்பது அனைவரும் அறிந்த ஒன்று. அதேபோல அவர்களின் பேச்சில் அனல் பறக்கும்; ஆனால் அநாவசியமான வார்த்தைகள், தரக்குறைவான வார்த்தைகள் இருக்காது. இப்படியிருக்கையில், மூத்தத் தலைவர்களில் ஒருவரான ஈ.கே. நாயனார் நாயைக் குளிப்பாட்ட நீச்சல் குளத்தை உபயோகப் படுத்துவேன் என்றால் அது அவரது கௌரவத்தைத்தான் பாதிக்கும். மாறாக, அவர் நீச்சல் கற்றுக் கொள்ள விரும்பும் பொதுமக்களுக்கு வாய்ப்பளிப்பேன் என்று கூறியிருந்தால் பாராட்டப்படக் கூடியதாக இருந்திருக்கும்.**

**கொப்பம்பட்டி, செ. அன்புமதி கோபிநாத்.**

◆ டெல்லி சிப்ஸ், கொறிப்பதற்கு சுவையாகவும் காரசாரமாகவும் இருந்தது.

காப்பரத்தாம்பட்டி, கே. ராஜாதிருவேங்கடம்.

◆ 'சிசு' கதையில் தவமிருந்து பெற்ற குழந்தை, கண்முன் துடிப்பது பார்த்து அனலாய் பாயும் தாயின் மனத்தை, அருமையாய்ப் படம் பிடித்துக் காட்டியிருந்தார் ஷோபா கோபாலன்.

சென்னை - 44. கி. சீனிவாசன்.

டாப்பு...டாப்பு!

வட்டமேஜை




# T.S.S. NIDHI LTD.

ESTD 1973

## THIRUMYLAI SASWATHA SAHAYA NIDHI LIMITED

Regd. Off. : 230, R.K. Mutt Road, Mylapore, Madras - 600 004 Ph : 4942303/4943365

**BRANCHES**

**THIRUVANMIYUR :** 112, Thiruvalluvar Salai, Kamaraj Nagar, Madras - 41. Ph: 410058.
**TONDIARPET :** 667, T.H. Road, Madras - 81. Ph : 5950472. **SAIDAPET :** 11, Jones Road, Madras - 15. Ph : 4851468.

## FIXED DEPOSIT SCHEME

| Period (Months) | 12 | 24 | 36 | 60 |
|---|---|---|---|---|
| Rate of Int. P.A. | 17% | 18% | 19% | 20% |

## KARPAGA VIRUTCHAM DEPOSIT SCHEME

(Re-Investment Plan) For Deposit of Rs. 1,000/-

| Period (Months) | 12 | 24 | 36 | 45 | 67 |
|---|---|---|---|---|---|
| Maturity Value Rs. | 1190 | 1425 | 1760 | 2025 | 3025 |

## SENIOR CITIZEN DEPOSIT SCHEME

Minimum Deposit
Rs. 10,000/-

Period
12 Months

**20% p.a**
**MONTHLY INTEREST**

**21% p.a.**
**ANNUAL INTEREST**

(APPLICABLE FOR AGED PERSONS ABOVE 55 YEARS, PENSIONERS, HANDICAPPED, WIDOWS, REGD. EDUCATIONAL AND CHARITABLE ORGANISATIONS)

## T.S.S. SPECIAL DEPOSIT SCHEME

Minimum Deposit Rs. 10,000/-

| Period (Months) | Maturity Value |
|---|---|
| 120 | Rs. 66,000 |
| 180 | Rs. 1,82,000 |

## RECURRING DEPOSIT SCHEME

Monthly Deposit Rs. 100/-

| Period in Months | 12 | 24 | 36 | 48 | 60 | 72 |
|---|---|---|---|---|---|---|
| Maturity Value Rs. | 1310 | 2850 | 4650 | 6710 | 9050 | 11,580 |

## SAVINGS DEPOSIT SCHEME 9% P.A.

## BUSINESS HOURS

| | Week Days | | Sunday | Holiday |
|---|---|---|---|---|
| Regd. Office Mylapore | 9.00 to 12.30 | 2.00 to 4.30 | 9.00 to 12.30 | Friday |
| Branch Offices | 9.00 to 12.30 | 2.00 to 4.30 | 9.00 to 12.30 | Tuesday |

### HIGH LIGHTS

- Recognised as a NIDHI COMPANY by Central Government of India.
- Company is in 23rd year of service.
- Transaction with members only.
  (Rupees two only for membership)
- Premature repayment facility as per terms and conditions.
- Monthly interest Warrants would be despatched in advance for the year of Deposit.

P.S. SAMBASIVAM - Secretary  G. KUMARAVELU - Vice-President  K.R.V. RAMANI - President

# வறுமையின் பிடியில் மாணவ மணிகள்... உதவிக்கரம் நீட்டுங்கள்!

●● என் தாயார் அமரர் கல்கி அவர்கள் எழுதிய கதைகளைக் கூறியும், படிக்கச் சொல்லியும் என்னை வளர்த்தார்கள். இன்று அமெரிக்காவில் நல்ல நிலைமையில் இருக்கிறேன். எனது அன்னை பெயரால் அமரர் கல்கி நினைவு அறக்கட்டளைக்கு ஒரு நன்கொடை அளிக்க விரும்புகிறேன்.

●● இன்று எனது குழந்தைகளின் பிறந்த நாள். நன்றாகப் படிக்கிறார்கள். அவர்களைப் போலவே நல்ல கல்வி பெற, வசதியற்ற மாணவர்களுக்கு உதவ விரும்பித் தங்கள் அறக்கட்டளைக்குப் பணம் அனுப்புகிறேன்.

— இவ்வாறெல்லாம் இதயத்தைத் தொடும் படியாகக் கடிதங்கள் எழுதிப் பலரும் அன்புடன் நன்கொடைகள் அனுப்பியதன் காரணமாக, பொருளாதாரத்தில் பின்தங்கிய சிறந்த மாணவர்களுக்கு ரூ.10,000 உதவித் தொகை விநியோகிப்பது என்று ஆரம்பித்த பணி, படிப்படியாக உயர்ந்து, நடப்புக் கல்வி ஆண்டுக்கு ரூ. 70,000/- விநியோகிப்பது என்று தீர்மானமாகியிருக்கிறது. அமரர் கல்கி அவர்களின் நூற்றாண்டு கொண்டாடப்படும் போது (1999) உதவித் தொகை ரூ. ஒரு லட்சமாக உயரும் என்று எதிர்பார்க்கிறோம். இதற்கேற்ப நன்கொடைகளும் அதிகரிக்க வேண்டும் என்று விரும்புகிறோம்.

ஆண்டுதோறும் ஆயிரக்கணக்கான மாணவ, மாணவியர் நன்கொடை கோரி உருக்கமாக விண்ணப்பிக்கிறார்கள். உதாரணமாக:

●● எனது தகப்பனார் கூலி வேலை செய்து வருகிறார். கோயில்மனையில் குடிசை கட்டி வாழ்ந்து வருகிறோம். மாத வருமானம் ரூ. 300 மட்டுமே. பத்தாம் வகுப்பில் 500க்கு 410 மதிப்பெண் பெற்று, தொழில் நுட்பப் பயிலகத்தில் "ஆட்டோ மொபைல் இன்ஜினீரிங்" பிரிவில் இடம் கிடைத்திருக்கிறது. என் பயிற்சியைத் தொடர தயவு செய்து உதவுங்கள்.

-ஏ.கோவிந்தன்,
பெரும்பாக்கம், 605 301.

●●நான் மூகாம்பிகை பொறியியற் கல்லூரியில் முதலாம் ஆண்டு படித்து முடித்திருக்கிறேன். என் தந்தை சென்ற ஆண்டு இருதய நோயால் திடீரென்று காலமானார். என் தாயார் கூலி வேலை செய்பவர். +2 வகுப்பில் 1032 மதிப்பெண் பெற்றேன். எனக்குத் தங்கள் அறக்கட்டளையின் உதவி கிடைக்கச் செய்யுங்கள்.

-ச.சுகந்தி, களமாவூர்



• ஏ.கோவிந்தன்



• ச.சுகந்தி

இவ்வாறு வாழ்க்கையுடன் போராடி வெற்றி பெறத் துடிக்கும் மாணவ மாணவியருக்கு உதவும் ஆர்வம் உள்ளவர்கள் தங்களால் இயன்ற அளவு நன்கொடை கல்கி நினைவு அறக்கட்டளைக்கு அனுப்பி வைக்கலாம்.

டிராஃப்ட் அல்லது எம்.ஓ. அல்லது காசோலை மூலம் KALKI KRISHNAMURTHY MEMORIAL TRUST என்ற பெயருக்கு மட்டுமே அனுப்புதல் வேண்டும். நன்கொடைகளுக்கு வருமானவரி விலக்கு உண்டு.

முகவரி:
கி.ராஜேந்திரன்,
(பதிப்பாளர், கல்கி நிறுவனப் பத்திரிகைகள்)
நிர்வாக அறங்காவலர்,
கல்கி கிருஷ்ணமூர்த்தி நினைவு அறக்கட்டளை,
நெ.1, ஐந்தாவது தெரு,
ஏரி வட்டம், நுங்கம்பாக்கம்,
சென்னை - 600 034.

# KALKI SHOPPING PAGE

ஹோமியோபதி டாக்டரால் உருவாக்கப்பட்டது

MARUTHI

## மாருதி

ஹோமியோபதி பற்பசை

உங்களின் எல்லாவித பல்தொல்லைகளும் இன்றோடு தீர்ந்தன.

விற்பனையாளர்கள் அணுகவும் :

**S.K.N. HOMOEO LAB**

15, I Main Road, R.A. Puram
Madras - 600 028 Ph :4936233

---

## மணமக்கள் தேவை
## கம்ப்யூட்டர் ஜாதகம்

அனைத்துசமூகத்திலும், ஆயிரக்கணக்கான வரன்கள் பெற உடன் பதிவு செய்ய தொடர்பு கொள்ளவும்.

கம்ப்யூட்டர் ஜாதகங்கள் நொடிப் பொழுதில்

| | |
|---|---|
| ஆங்கிலம், தமிழ் | ரூ. 50/- |
| எதிர்கால கணிப்புடன் | ரூ. 150/- |
| ஆண்டு பலன் : | ரூ. 50/- |
| கல்யாண பொருத்தம் : | ரூ. 50/- |
| NUMEROLOGY PREDICTIONS : | Rs. 50/- |

CONSULT DIVINE ASTROLOGER
THETIYUR V MAHADEVAN
WITH PRIOR APPOINTMENT.

ASTROLOGY SOFTWARE FOR SALE

## ஸ்வயம்வராலயா

(GOVT. REGD)

18, ஸ்டேஷன் ரோடு, மேற்கு மாம்பலம், சென்னை – 33.
போன் : 425822, 4846427
7–ஏ, சாந்தி விஹார் காம்ப்ளக்ஸ், லஸ்,
சென்னை – 4. போன்:846278,
88, 1, 16th Cross, 6th Main, Malleswaram,
Bangalore - 560 055. Ph.:3340146

ALL POOJA ENTHRA/RAKSHA AVAILABLE
RATES ON REQUEST

---

## RAMACHANDRA SAREES

*Quality & Quality*

உயர்ரக Madurai Sungudi
புடவைகள் வழங்குபவர்கள்

## ராமசந்திரா சாரீஸ்



*(மதுரை சுங்குடி புடவைகளின் உலகம்)*

H.O. 37-B, Arya Gowder Road,
Postal Colony Bus Stop 3rd Street,
West Mambalam, Madras - 33.
Ph : 4896532

B.O.No. 2 R.K.Mutt Road, Picnic plaza
(Basement Shop) Luz Corner,
Mylapore, Madras - 4

BENGAL, COIMBATORE KORA, DEVENDRA , VENKATAKIRI & COTTON SAREES

வழங்குபவர்கள் : Ramachandra Sarees 20 B. Old Kuyavar palayam road, Madurai - 625 009.

---

## மீராவின் வைப்பு நிதித் திட்டம்

இன்றே ரூ. 1000 Deposit செய்து அதற்கு நிகராக எங்கள் show room-லிருந்து சூரத் சாரிகள், பெங்கால் காட்டன்; காஞ்சிபுரம் பட்டு, மைசூர் சில்க், கோரா காட்டன், சுங்குடி சேலைகள் மற்றும் சுடிதார் பிளவுஸ் ஆகிய அனைத்தையும் விற்பனைக்கு எடுத்துச் செல்லலாம். மேலும் நீங்கள் Deposit செய்த தொகையை 46 மாதங்களில் இரண்டு மடங்காக பெறலாம். அதுவரை எங்களிடமிருந்து புடைவைகளை விற்பனைக்கு எடுத்துச் செல்லலாம். மேலும் விவரங்களுக்கு,

## மீரா டெக்ஸ்டைல்ஸ்

*26/1, மோதிலால் தெரு, தி.நகர்,*
*சென்னை - 600 017.*
*போன் : 4342696*

Authorised Dealers :
WIMCO FABRICS - SURAT

# அன்புள்ள வாசகர்களே,



கல்கியின் வடிவ மாற்றம் குறித்த கருத்துக் கணிப்பில் ஏராளமானவர்கள் பங்கேற்று உதவியிருக்கிறீர்கள். நன்றி! பெரும்பான்மை வாசகர்களின் கருத்தை மதித்து, கல்கி இதழின் வடிவத்தை மாற்றுவதில்லை என முடிவெடுத்திருக்கிறோம்.

இந்தக் கருத்துக் கணிப்பில் பங்கேற்றவர்களில் 25 பேரை, குலுக்கல் முறையில் தேர்ந்தெடுத்துக் கொடுத்தார் வேங்கடசுப்ரமண்யம். பின்வரும் அந்த 25 பேருக்கும் தலா ரூபாய் நூறு மதிப்புள்ள புத்தகங்கள் அனுப்பி வைக்கப்படுகின்றன.

1) திலகம் சண்முகசுந்தரம், சேலம் - 636 001.
2) என். அருண்குமார், ராஜபாளையம் - 626 108.
3) ரொசாரியோ ரவிச்சந்திரன், சென்னை - 59.
4) என். ராதா, மும்பாய் - 400 037.
5) பானுசுந்தரம், மும்பாய் - 400 071.
6) ஜி. பாலசுப்ரமணியன், காரைக்குடி - 630 002.
7) எஸ். நாராயணசாமி, திருச்சி - 3.
8) கே.சி. நடராஜன், கோவை - 641 006.
9) வி. பிரசன்னா, சென்னை - 600 049.
10) கே. முத்தையா, மதுரை - 625 521.
11) கே. மணி, கோயமுத்தூர் - 642 126.
12) ச.விஜயன், பு.புளியம்பட்டி.
13) ஜி. சாந்தி, சென்னை - 61.
14) டி. ராமசுப்பிரமணியன், திருநெல்வேலி - 627 011.
15) டி. கமலம், செங்கோட்டை.
16) அ. இராஜேந்திரன், திருத்தங்கல்.
17) என். ஆர். லெனிகாந்த், சென்னை - 26.
18) ஆர். முத்துராமன், சிவகங்கை - 630 561.
19) வி.என்.ராமமூர்த்தி, வேலூர் - 632 004.
20) டி.எஸ்.கே. கிருஷ்ணமூர்த்தி, கோவில்பட்டி - 627 701.
21) பு. இராசமாணிக்கம், முசிறி.
22) பி. வாகீசன், நெய்வேலி - 607 801
23) டாக்டர் எம்.எஸ். கோவிந்தராஜன், சுப்ரமணியபுரம்.
24) கி. நாகராசன், மூலப்பாளையம்.
25) மருதன் சங்கர், மாமல்லபுரம் - 603 104.

இந்த 25 அதிர்ஷ்டசாலிகளைத் தேர்வு செய்ய வேங்கடசுப்ரமண்யத்தை எப்படித் தேர்ந்தெடுத்தோம் என்கிறீர்களா? நமது சந்தா பிரிவைச் சேர்ந்த ஊழியர்கள், கல்கி சந்தாதாரர்களின் பெயர்களில் குலுக்கல் முறையில் அவர் பெயரைத் தேர்ந்தெடுத்தார்கள்!

கருத்துக் கணிப்பில் கலந்து கொண்டவர்களுக்கு மீண்டும் நன்றி.

— ஆசிரியர்



படம் : பேஜர் கே. மூர்த்தி




"உண்மை எது என்கிறதை கட்சித் தலைமைதான் முடிவு செய்யும். வேற விதமான உண்மை பேசறவங்க யாரா யிருந்தாலும் கட்சியிலிருந்து நீக்கிடு வோம்...."




"என் மகன்களைப் பத்தி எந்த கேள்வியும் கேட்கிறதில்லைன்னு நீங்க உறுதிமொழி எடுத்துக்கிட்டா நான் பேட்டிக்குத் தயார்!"

# ஆஹ்..ஹாஹ்ஹா...

"என்ன மர்மம்னே புரியலை..... தொழில் வர்த்தக வட்டாரங்கள்ல காங்கிரஸோட கொள்கைகளை முதல்ல வரவேற்றாங்க; அப்புறம் பி.ஜே.பி கொள்ளைகள் பிரமாதம்னாங்க... இப்ப ஐக்கிய முன்னணியோட கொள்ளைகள் அபாரம்ங்கறாங்க...."

"ஊழலை ஒழிக்க வேண்டியது தான். ஆனால், எங்க ஐந்தாண்டு ஆட்சியின் கடைசி வருஷத்தில அதைக் குறிக்கோளா வைச்சக்கு வோம்.... இப்போ ஊழல் எம்.பி.க்கள் ஆதரவெல்லாம் இல்லாம சரிப்படாதே!"







— இந்தியன்

# 8 குறையொன்றுமில்லை

ஒரு பானை இருக்கிறது. அது காரியம் - அதாவது உண்டான வஸ்து. அந்த வஸ்துவுக்கு - காரியத்துக்கு - மூன்று காரணங்கள்.

முதலாவது உபாதான காரணம். பானையாய் எது மாறியதோ அது உபாதான காரணம். இங்கே பானையை உருவாக்கப் பயனான மண் உபாதான காரணம்.

அடுத்தது மனுஷ்ய சக்தி - அந்த சக்தி தானே பானையை ஆக்குகிறது? இது நிமித்த காரணம் எனப்படுகிறது. பானையை உருவாக்கிய குயவர் நிமித்த காரணமாகிறார்.

குயவருக்குப் பானை செய்ய சக்கரம் வேண்டும். ஒரு தண்டம் வேண்டும். இவை பானை செய்ய அவருக்கு சஹகரிக்கின்றதால் (உதவுவதால்) சஹகாரி காரணம் எனப்படுகின்றன.

இப்படி ஒவ்வொரு காரியத்துக்கும் காரணங்களை ஆராய்ந்து கொண்டே போகலாம். இந்த உலகத்தையே காரியமாக எடுத்துண்டோமானால், பரமாத்மா அதற்கு உபாதான காரணமா? நிமித்த காரணமா? சஹகாரி காரணமா?... என்று விசாரிக்கலாம்.

இதைப் பற்றி உபநிஷத் சொல்வதை ஆசார்யர்களெல்லாம் விவரிக்கிறார்கள் : எல்லா காரணங்களுமாய் அவனே இருந்து வருகிறான். ஜகத் காரண வஸ்து அவன்!

பகவானே விச்வமாய் காட்சி அளிக்கிறான்.

'தத்வம் அஸி' என்கிற மகா வாக்யத்தை ஒரே பதத்தில் சொல்லணும் என்றால் 'விச்வம்' என்று சொல்லணும்.

அந்த விச்வத்தில் நடப்பனவற்றுக்கு எல்லாம் எத்தனை காரணம் சொன்னாலும் ஐந்தாவது காரணமாய் பரமாத்மா இருக்கிறான்.

இந்த உபந்யாஸத்தையே எடுத்துக் கொண்டோமானால், இதற்கு ஐந்து காரணம்.

முதல் காரணம், உபந்யாஸகருடைய சரீரம். அது உபந்யாஸம் நடக்கிற இடத்துக்கு வந்து சேரணும்.

சரீரம் மட்டும் உபந்யாஸத்துக்குக் காரணமாயிடுமா...? சொல்கிறவனுடைய வாக்கு, கேட்கிறவனுடைய செவிப்புலன் என்கிற இந்திரியங்கள் இரண்டாவது காரணம்.

இந்த இரண்டுக்கும் மேலே மூன்றாவது காரணம் மனஸ். உடம்பு, இந்த்ரியங்களுடன் மனஸும் கூடச் சேரணும்.

ஒருத்தர் ராத்திரி சௌகரியமாய் தலையணை வெச்சுண்டு தூங்கறார். விடிஞ்சதும் பார்த்தா தலையணையடியிலே மூன்று பாம்பு! அது இருக்கறது மனஸுக்குத் தெரிஞ்சிருந்தால் தூக்கம் வருமோ...? மனஸும் சேர்ந்து தூங்கினதாலே தானே அவரால் தூங்க முடிந்தது...! ஆகையினாலே





எந்த காரியத்துக்கும் மனஸ் கூட சேர வேண்டும்.

நாலாவதாக, சரீரத்துக்குள்ளே இருக்கிற ஆத்மா ஒரு காரணம். சாந்தோக்ய உபநிஷத்திலே ஒரு கதை உண்டு. உடம்பின் காது, மூக்கு, கண், வாய் எல்லாத்துக்கும் ஒரேயடியாய் பெரிய சண்டை வந்ததாம். எல்லாம் பிரும்மாவிடம் போய், 'எங்களுள் யார் பெரியவன்? நீங்களே சொல்லுங்கள்...' என்றதாம்.

அதற்கு பிரும்மா சொன்னார், 'நீங்கள் ஒவ்வொருத்தராக ஒரு வருஷ காலத்துக்குத் தனித் தனியே சரீரத்தை விட்டுப் பிரிந்து போங்கள். யாரு விலகறதாலே உடம்புக்கு அதிக பாதிப்போ அவர் தான் உயர்த்தி...!'

'அப்படியே ஆகட்டும்'னு முதலில் கண் ஒரு வருஷத்துக்குப் பிரிந்து இருந்ததாம். 'தீய விஷயங்களைப் பார்க்காமல் நிம்மதியாய் இருந்தேன்' என்றார் உடம்புக்குரியவர்.

அதே போலக் காதும் மூக்கும் மற்ற இந்த்ரியங்களும் அவரை விட்டுப் பிரிஞ்சு போன போதும் கஷ்டமில்லாமல் இருந்தார்.

ஒருநாள் அந்த உடலுக்குள் இருந்த பிராணன் புறப்பட்டுப் போனது... அவ்வளவு தான்! பிராணன் கிளம்பினதும் மற்ற எல்லா இந்த்ரியங்களும் மொத்தமாகப் புறப்பட்டுப் போய் விட்டன!

ஆகவே, எந்த ஒரு செயலுக்கும் ஜீவாத்மா என்கிற பிராணன் நாலாவது காரணம் என்று தெரிகிறது.

ஆனால் பிராணன் மட்டுமே தனித்துச் செயல்பட முடியுமா...? உடம்பும் இந்த்ரியங்களும் மனஸும் ஆத்மாவுடன் சேரணும். அதோடு இன்னொரு காரணமும் சேருகையில் தான் பூர்ணத்துவம் உண்டாகிறது. அது என்னவென்று பார்த்தால்... அதுக்கு ஒரு கதை சொல்லலாம். நடந்த சம்பவம்...

ஸ்ரீ ரங்கத்திலே எம்பார் காலட்சேபம் பண்ணறார். அப்போ வடக்கு சித்திரை வீதிக்காரர் ஒருத்தர் திண்ணையிலே வீணாகக் காலத்தைப் போக்கிக் கொண்டு உட்கார்ந்திருந்தார். எல்லோரும் அவரை, "காலட்சேபத்துக்கு வரக் கூடாதா – இப்படி வீணா காலத்தைப் போக்கறீங்களே...?" என்று கேட்டுக் கேட்டுப் பார்த்தார்கள். யார் கேட்ட போதும் அவர் மசியவில்லை; அப்படியே மறு பக்கமா தலையைத் திருப்பிக் கொண்டு விட்டார். இப்படியே பல நாட்கள் கழிந்தன. திடீரென்று ஒருநாள் திண்ணைக்காரர் தாமே காலட்சேபத்துக்குக் கிளம்பி வந்தார்.

எல்லாரும் ரொம்ப மகிழ்ந்து போனார்கள். பிரவசனம் பண்ணின எம்பார் கேட்டார், "இத்தனை நாளா வராத இவர் இன்னைக்கு வந்திருக்கார் என்றால் அதற்கு யார் காரணம்? ஆசார்யர் காரணமா? அவரை வரச் சொல்லி வற்புறுத்திக் கூப்பிட்டவர்கள் காரணமா...? ஆசார்யர்தான் காரணம் என்று நினைக்கிறவர்கள் கையை உயர்த்தலாம்... ஆசார்யர்தானே எதிரிருப்பவருக்கு எவ்வளவு புரியும் என்று பார்த்து, அதற்கு ஏற்ப சொல்பவர்...? அதனாலே அவர்

முக்கூர் லக்ஷ்மிநரசிம்மாச்சார்யார்

காரணம்னு நினைக்கறவர்கள் கை உயர்த்தலாம்..." என்றார்.

கூட்டத்தில் பாதிப் பேர் கையை உயர்த்தினார்கள்.

"சரி, அழைத்தவர்களின் வற்புறுத்தலால் தானே இவர் வந்திருக்கிறார்... அதனால் இவரை வரச் சொல்லிக் கூப்பிட்டவர்களே இவருடைய வருகைக்குக் காரணம் என நினைக்கிறவர்கள் கை உயர்த்தலாம்...?" என்றார்.

கூட்டத்தில் இன்னொரு பாதி கையை உயர்த்தியது!

அந்தச் சமயத்திலே ஆசார்யர் எம்பார் சொல்கிறார்... "இப்போ சொன்ன எதுவுமே காரணமில்லை... இவரை இங்கே வரவழைச்சதுக்குக் காரணமானவன் பரமாத்மாதான். இத்தனை நாளாக இல்லாமல், திடீரென்று இங்கே வரணும் என்று அந்த புத்தியைக் கொடுத்ததே அந்த பரமாத்மாதான்..." என்றார்.

உலகத்தின் சகல காரியங்களுக்கும் ஐந்தாவது காரணமாய் இருப்பவன் அந்த பரமாத்மாதான்!

ஆடு, மாடு மாதிரி மனிதர்களை ஓட்டுவதில்லை பகவான். ஜீவாத்மாவுக்கு ஒரே ஒரு முக்யமான இடத்திலே சுதந்தரத்தைக் கொடுக்கிறான். நல்லது இது; கெட்டது இதுன்னு காட்டிக் கொடுத்து, அது எதைப் பிடிச்சுக்கறதுன்னு கவனிக்கறான். மனிதன் நல்லதைப் பற்றுகிறானா? தீயதைப் பற்றுகிறானா? என்று சோதித்துப் பார்ப்பது அவனுடைய லீலை!

ஆகையினாலே, விச்வம் என்கிற சப்தத்துக்குப் பொருள் கேட்டால், 'ஜகத்காரண வஸ்துவாக பரமாத்மா இருக்கிறான்; அவனே காரியமாய் இப்படிப் பரிணமிக்கிறான். விச்வத்துக்குக் காரிய – காரணம் அவனே ஆனதனாலே விச்வம் என்கிற சப்தத்தினால் பரமாத்மா அழைக்கப்படுகிறான்.

இதுக்கு மேலே இன்னொரு அர்த்தமும் இருக்கிறது :

சுவாபாவிகமாக – அதாவது இயற்கையிலேயே எண்ணிறந்த திருக்கல்யாண குணங்கள் இருப்பதாலே பகவான் என்று அழைக்கப்படுகிறான் அவன்.

பகவான் என்றால்...?

பகம் என்றால் புத்தி – புத்தி உடையவன், புத்திமான், குணவான், (பகத் உடையவன்) பகவான். என்ன குணங்கள்...? ஆறு குணங்களை அவனுக்கே உரியவையாக விவரிக்கிறார்கள் :

முதலாவதாக ஞானம். குறுகுதல் விரிதல் என்பது பகவானுடைய ஞானத்துக்குக் கிடையாது. மனித ஞானம் மாதிரி இல்லை அது... மனிதர் ஒருவர் தத்துவம் படிக்கிறார். அவர் புத்தி ஒருநாள் அதை கிரஹிக்கிறது போல் இன்னொரு நாள் கிரஹிப்பதில்லை! ஏன்...? அந்த புத்திக்கு சங்கோச விஹாஸம் இருக்கிறதனாலே அது அப்படி நடந்து கொள்கிறது. சில நாள் குறுகிப் போயிடறது; சில நாள் சாத்விகமான ஆகாரம் சாப்பிடாததாலே ஒத்துழைக்கிறதில்லை. இந்த மாதிரி கஷ்டங்களெல்லாம் பகவானுக்குக் கிடையாதே! நமக்கு இந்த்ரியங்கள் எல்லாம் வேண்டியிருக்கு; அப்படியில்லை பரமாத்மா. அவனுடைய ஞானம் சங்கோச விகாசம் இல்லாத ஞானம்.

பலம் என்பது பகவானின் இன்னொரு குணம். எல்லாவற்றையும் தாங்கும்படியான பலம். பதினாலு லோகத்தையும் தாங்கறான் பரமாத்மா. நாம் அவஸ்தைபட்டுத் தாங்கற மாதிரி தாங்கறானா...? அதெல்லாம் இல்லை. சங்கல்ப ஆதீனத்திலே – 'அப்படி இருக்கணும்' என்று அவன் நினைக்கிறதாலேயே மட்டுமே தாங்குகிற பலம் அவனுக்கு இருக்கிறது.

ஐச்வர்யம் மூன்றாவதான குணம். நித்ய விபூதி என்று சொல்லப்படுகிற வைகுண்டம், லீலாவிபூதின்னு சொல்லக்கூடிய இந்த உலகம், உலகத்தைச் சேர்ந்தவை – எல்லாம் அவனே! ஒரு மாந்தோப்பு இருக்கிறது – அதன் உரிமைக்காரர் ஒருத்தர். காவல்காரர் இன்னொருத்தர். காவல்காரருக்கு மாம்பழத்தை அனுபவிக்கும் உரிமை இருக்கிறதா என்றால், இல்லை! ஆனால், பகவான் அப்படி இல்லை. இந்த லோகத்தின் உரிமைக்காரனும் காவல்காரனும் அவனே!

அர்ச்சனை பண்ணும்போது எந்த மந்திரம் சொன்னாலும் நம : (நமஹ – உச்சரிப்பு) என்று முடிக்கிறோமே... இதற்கு அர்த்தம் என்ன...? 'நம:' என்றால் 'இல்லை என்னுடையது...' என்று பொருள். அதாவது, அத்தனை விஷயங்களையும், 'என் பொருட்டில்லை... உனக்காக என்று அவனிடம் சமர்ப்பிக்கிறோம்.

'எனதில்லை' என்று சொல்வதுதானே வழக்கு. இல்லை என்னுடையது என்று ஏன் வர வேண்டும்...? 'எனது' என்று முதலில் சொல்லி விட்டாலே அப்புறம் 'இல்லை' என்று சொல்ல மனம் வராமல் போய் விடுமோ என்கிறதுக்காகத்தான் 'இல்லை என்னுடையது' என்று சொல்ல வைத்தது!

ஐச்வர்யம் அத்தனையும் அவனுடைய குணம்!

நாலாவது குணம் வீரியம். எல்லாவற்றையும் ஜெயிக்கும் தன்மை. உயர்ந்த பராக்கிரமத்தினாலே சர்வத்தையும் அடக்கி, ஆளும்படியான ஆதார குணம்.

சக்தி – ஐந்தாவது குணம். உலகத்திலே அதுதுவும் அதனதன் இடத்திலே நிற்பதற்கு ஆதார சக்தியாக இருக்கக்கூடியவன்.

ஆறாவது குணம் தேஜஸ். ஒளிப் பிழம்பாய், சூரியனாகவும் சந்திரனாகவும் நட்சத்திரங்களாகவும் ஜொலிக்கிறான் பகவான்.

இந்த ஆறு குணக்கூட்டங்களுக்கு பகம் என்று பெயர். இவற்றை உடையவன் பகவான்! விச்வ சப்தத்துக்கு 'பகவான்' என்று பொருள் ஆனதினாலே அப்படிப்பட்ட பகவானை 'விச்வம்' என்று சொல்லி நாம் ஆராதனை பண்ண வேண்டும்.

சஹஸ்ரநாமத்தின் முதல் நாமாவான 'விச்வம்' என்பதற்கு அப்படியொரு முக்கியத்துவம்.

(தொடரும்)

# குத்து மதிப்பா எத்தனை சொத்து?

அந்நிய செலாவணி மோசடி வழக்கில் கைதாகி, உள்ளே இருக்கும் சசிகலாவின் சொத்து மதிப்பு எத்தனை?

பத்தாவது வரை மட்டும் படித்திருந்த சசிகலா, 1974 ல் நடராஜனை மணந்து கொண்டு 50 பவுன் நகையுடன் மன்னார்குடியிலிருந்து வந்தார். 1977 ல் எம்.ஜி.ஆர். ஆட்சிக்கு வந்த போது, அதுவரை மாநில அரசின் ஊழியத்தில் இருந்த நடராஜனின் பதவி போயிற்று. (அவர் அப்போது தி.மு.க. அனுதாபி.) தம் ஐம்பது பவுன் நகைகளை அடகு வைத்தும் விற்றும்தான் அப்போது வாழ்க்கையை நடத்த முடிந்தது அவரால்.

பிறகு வீடியோ லைப்ரரி நடத்தியதும் ஜெவுக்கு நெருக்கமானதும் உலகறிந்த விஷயம். சசிகலா வாழ்வில் 'பொற்'காலம் தொடங்கியது அப்போதுதான்.

1991-96 ஐந்து வருட அ.தி.மு.க ஆட்சியில் அங்கிங்கெனாதபடி எங்கும் நில ஆக்கரமிப்பு செய்து, தமிழகத்தில் கொஞ்சம் போல் நிலங்களைப் பெரிய மனம் கொண்டு விட்டு வைத்திருக்கும் சசிகலாவின் (வெளியே தெரிந்த) சொத்து மதிப்பு இதோ :

(ஒவ்வொன்றும் அவரது பல்வேறு உறவினர்களின் பெயர்களில் வாங்கப்பட்டவை.)

- காய்தே மில்லத் மாவட்டத்திலுள்ள சுந்தரக் கோட்டை என்னும் இடத்தில் 10 ஏக்கர் பரப்பில் ஒரு பெரிய கல்லூரி - சசிகலாவின் சகோதரர் திவாகரன் கட்டியது.
- சென்னை மைலாப்பூரில் தமது ஐந்து உறவினர்களுடன் கூட்டாக சசிகலா வாங்கியிருக்கும் இடத்தின் மதிப்பு 54 லட்சம்.
- திருத்துறைப்பூண்டியில் ஒரு பெரிய குளிர்சாதன வசதியுடன் கூடிய திருமண மாளிகை. மதிப்பு ரூபாய் ஒரு கோடி.
- சசிகலாவின் (மறைந்த) அண்ணன் வினோதகன் நினைவாகக் கட்டப்பட்ட மருத்துவமனை (1991 ல் - ரூ. 37 லட்சம்.)
- திவாகரனுக்குச் சொந்தமான செங்கமலம் பெண்கள் கல்லூரி. ரூ. 3 கோடி மதிப்பு.
- ராமசாமி உடையாரின் அரிசி மற்றும் எண்ணெய் ஆலையை (திருவாரூரில்) ஐந்து கோடிக்கு வாங்கி இருக்கிறார்.
- ஜே.எஸ். ரியல் எஸ்டேட் பிஸினஸ். மைலாப்பூரில் காந்தி வந்து தங்கியதாகச் சொல்லப்படுகிற வீட்டை (54 லட்சம் மதிப்பு) இதன் மூலம்தான் வாங்கியதாக விவகாரம் கிளம்பியது.
- இவை தவிர திருச்சியிலும் தி. நகரிலும் சசிகலாவின் உறவினர்கள் பெயரில் பங்களாக்கள்.

இவை ஒருபுறம் இருக்க 1992 நிலவரப்படி தமது வருடாந்திர வருமானம் 2.5 லட்சம் என்றும் மொத்த சொத்து மதிப்பு ஒரு கோடி என்றும் வருமானவரித் துறைக்குக் கணக்குக் கொடுத்திருக்கிறார் சசிகலா. இந்த ஒரு கோடி சொத்தில் ரூபாய் அறுபது லட்சம், வெளி நாட்டிலிருந்து தமக்குக் கிடைத்த வருமானம் என்றும் கூறியிருக்கிறார்!

தொகுப்பு : **கிச்சா**

நன்றி : **இந்தியன் எக்ஸ்பிரஸ்**

"வசு! இந்த மேட்டரைப் பாரேன். மெர்ஸி கில்லிங்குக்கு ஆதரவா நம்ம நாட்டுல ஒரு சங்கம் ஆரம்பிக்கப் போறாங்களாம்!"

மூக்கில் வழிந்த கண்ணாடியை நடுவிரலால் தூக்கி விட்டபடி சொன்னார் ரகுராம்.

"ம்..."

"என்னைக் கேட்டா, மெர்ஸி கில்லிங்கைத் தீவிரமா நடைமுறைப்படுத்தணும். வெஜிடபிளா கிடந்து அவஸ்தை படறதை விட, லேசா ஒட்டிக்கிட்டிருக்கிற உசிரை எடுத்துடறது எந்த விதத்துலயும் தப்பே இல்லைன்னுதான் சொல்வேன்!"

வசுதா அவரை தீர்க்கமாகப் பார்த்தாள்.

"வெஜிடபிள்னு நீங்க எதைச் சொல்றீங்க?"

"நினைவில்லாம, உணர்வில்லாம படுத்த படுக்கையா நாள் கணக்குல, வருஷக் கணக்குல கிடக்கறாங்களே, அவங்களைத்தான்!"

"அவங்க மட்டும்தானா? உணர்வுகளை வெளிக்காட்ட முடியாம, மனசு மரத்துப் போயி நடைபிணமா இருக்கிறவங்க?"

ரகுராம் சட்டென்று மௌனமானார். அவர் முகம் கன்றிப் போனது. வசுதாவின் கேள்வி அவரை நிறையவே பாதித்திருக்க வேண்டும். உண்மை சுடும்!

இருபத்தைந்து வருடங்கள்...

அணு அணுவாக கட்டு, பொசுங்கி, கருகி, சிதைந்து...

திருமணமானவுடன் ஏதேதோ கனவுகளைச் சுமந்து கொண்டு, எதிர்பார்ப்புகளை வளர்த்துக் கொண்டு...

"என்னங்க, கரெஸ்பாண்டன்ஸ்ல எம்.ஏ. பண்ணலாம்னு இருக்கேன். என்ன சொல்றீங்க?"

"இப்ப எதுக்கு அதெல்லாம்?"

"பி.ஏ.வுல நான் யுனிவர்சிடி ரேங்க் ஹோல்டர். மேல படிக்கலாம்னு இருந்தேன். அதுக்குள்ள நம்ம கல்யாணம் நிச்சயமாயிருந்து. எம்.ஏ. முடிச்சு பி.எச்.டி. பண்ணணும்னு ரொம்ப ஆசை!"

"ஓஹோ, என்னை விட அதிகமா படிச்சு என்னை மட்டம் தட்டணும்னு நினைப்போ?"

வசுதா தவித்தாள்.

"ஐயையோ, அப்படிலாம் இல்லைங்க!"

"இதப் பாரு, இந்தப் பேச்சுக்கு இதோட முடிவு கட்டு. புரிஞ்சுதா?"

தீர்மானமாகக் கூறிவிட்டு அந்த இடத்தை விட்டு நகர்ந்து விட்டார் ரகுராம்.

திருமண வாழ்வில் வசுதாவுக்கு விழுந்த முதல் அடி. பலமாகத்தான் இருந்தது. மனது வலித்தது. இருந்தாலும் பொறுத்துக் கொண்டாள். போகப் போக அவன் புரிந்து கொள்ளப்படுவாள் என்ற நம்பிக்கை.

இந்த நம்பிக்கைதான் சில நாட்களுக்குப் பிறகு மீண்டும் அவள் ஆசையை துளிர்விடச் செய்தது.



"என்னங்க, படிப்புதான் வேண்டாம்னு சொல்லிட்டீங்க. நாட்டியத்தையாவது தொடர்றேனே!"

"நாட்டியமா?"

ரகுராமின் புருவங்கள் உயர்ந்தன.

"ஆமாங்க. நான் ரொம்ப நல்லா பரதநாட்டியம் ஆடுவேன். கல்யாணத்துக்கு முன்னாலேயே எங்கப்பா சொன்னாரே, ஞாபகமில்லையா? நான் சொன்னா என் பழைய மாஸ்டரே வந்து கத்துக் கொடுப்பார். என்ன சொல்றீங்க?"

ரகுராமின் கண்களில் அனல் பறந்தது.

"இதென்ன கூத்தாடிக் குடும்பம்னு நினைச்சியா? இந்த நாட்டியம், அபிநயம்லாம் எனக்குக் கட்டோட பிடிக்காது. யாரந்த மாஸ்டர்? இந்தப் பக்கம் வந்தா முட்டியப் பேத்துருவேன்! இந்த விபரீத ஆசைகளையெல்லாம் மூட்டை கட்டி வெச்சிட்டு, ஒழுங்கா குடும்பம் நடத்தற வழியப் பாரு!"

பச்சை செடியில் ஆசிட் மழை. இடிந்து போனாள் வசுதா.

ஏன்? இதெல்லாம் ஏன்?

புரியவில்லை.

சிறை! மாட்டிக் கொண்டாகி விட்டது. அக்கினியால் ஏற்பட்ட பந்தம். அக்கினியால் மட்டுமேதான் இதற்கு விடிவு கிடைக்குமோ?

யோசித்தாள். மறுபடியும் மறுபடியும் யோசித்தாள். வசுதா தன்னை மாற்றிக் கொண்டாள்.

தன் குடும்பம், தன் கணவர், தன் குழந்தைகள் என்ற உணர்வு பொங்கியது. சிறந்த மனைவியாக, சிறந்த தாயாக உருவாக வேண்டும் என்ற தாகம் பிறந்தது.

வீட்டில் சின்னச் சின்ன விஷயங்களில் கூட கவனம் செலுத்தத் தொடங்கினாள். கணவரின் தேவைகளைக் குறிப்பறிந்தே பூர்த்தி செய்தாள்.

ஆனால்... அதை உணர ஆளில்லை.

எல்லாம் அவள் கடமை, செய்தே ஆக வேண்டும் என்ற எண்ணம்தான் ரகுராமிடமிருந்து வெளிப்பட்டது.

மகனைப் பள்ளிக்கு அனுப்பும் கட்டம் வந்தது.

"என்னங்க, நம்ம பிரதோஷை எம்.எஸ்.ஸ்கூல்ல போடலாங்க. அதுதான் இங்கே நல்ல ஸ்கூல்னு எல்லாரும் சொல்றா!"

"முடியாது! அபர்ணா மெட்ரிகுலேஷன்ல அவனைச் சேர்க்க ஏற்கெனவே ஏற்பாடு பண்ணியாச்சு!"

"ஐயையோ, அது அவ்வளவு நல்ல ஸ்கூல் இல்லைன்னு சொல்றாங்களே... பசங்க கெட்டுப் போயிடறாங்களாம்!"

"கொஞ்சம் உன் திருவாயை மூடறயா? எல்லாம் நாம வளர்க்கறதுல இருக்கு. கெட்டுப் போகணும்னா அவன் எங்கே இருந்தாலும் கெட்டுத்தான் போவான். கோபுரத்து உச்சில உசத்தி வெச்சுடறதுனாலே மட்டும் சாக்கடை மணக்காது!"



"ஆனா அதே கோபுரம் சாக்கடைல விழுந்தா நாறிப் போயிருங்க!"

"என்னை எதிர்த்தாப் பேசறே? சனியனே! என்ன பண்றதுன்னு எனக்குத் தெரியும். இந்த வீட்டுல இதுக்கு மேலயும் நீ ஒரு வார்த்தை பேசினா, கொலை விழும் ஜாக்கிரதை!"

வசுதா வாயடைத்துப் போனாள்!

ஈகோ!

இவள் சொல்வதை, தான் என்ன கேட்பது என்ற எண்ணம். அதன் விபரீத விளைவுகளைப் பற்றி சிந்திக்காத மூர்க்கத்தனம்.

ரகுராம் கடைசியாகச் சொன்ன வார்த்தை அவளை ரொம்பவே பாதித்தது. அன்றிலிருந்து வசுதா மௌனம் சாதிக்கத் தொடங்கினாள். கேட்டதற்கு மட்டும் பதில். மற்றபடி கணவரின் போக்குக்கே எல்லாவற்றையும் விட்டு விட்டாள். அவர் போகும் பாதை தவறென்று புரிந்தாலும் அவள் சொல்வது எதுவுமே எடுபடப் போவதில்லை!

உணர்வுகளின் சுயகட்டுப்பாட்டுக்கும் தற்கொலை என்றுதான் பெயரோ?

மகனும் மகளும் ரகுராமின் நிழலில்தான் வளர்ந்தனர். அவர்களைப் பொறுத்தவரை தாய் ஒரு இயந்திரம். அது சமைத்துப் போடும். துணிகளைத் துவைக்கும். மடித்து வைக்கும். அறையை சுத்தமாக்கி வைக்கும். தங்களின் கிண்டல்களையும், கேலிகளையும், ஏவல்களையும் மௌனமாக ஏற்றுக் கொள்ளும். ஆனால் கேள்விகள் கேட்க மட்டும் அதற்கு உரிமை கிடையாது.

இருபத்தைந்து வருடங்களாக இந்த வாழ்க்கை...

சில நேரங்களில் வசுதாவுக்குக் கோபம் வந்ததுண்டு, தனது இயலாமையின் பேரில். ஆனால் என்ன பயன்? செக்கு மாடுகளுக்கு சுதந்திரம் கிடைப்பதில்லை.

இத்தனை வருடங்களில் மௌனம் சர்ச்சைகளை தவிர்த்தது என்னவோ உண்மைதான்! அவள் மனமும் நிதானம் பெற்று பாதிப்புகள் பற்றிய கவலையைத் துறந்தது.

ஆனால் வசுதாவே எதிர்பார்க்



"என் மனைவியோட 'குடுமி' எப்பவும் என் கையில்தான் என்று இப்பவாவது நம்பறியா...!"
– ஜூனியர் தேஜ்

காத விதமாக ரகுராமும் வாயடைத்துப் போகும் காலமும் வந்தது.

தோளுக்கு மேல் வளர்ந்த பிள்ளைகளுக்கு அவருடைய உபதேசங்களும், அதட்டல்களும் சலிப்பைத் தந்தன. அவரையும் உதாசினப்படுத்தி ஒதுக்க ஆரம்பித்தனர். உதாசினங்களுக்குப் பழக்கப்படாதவர். தானே சட்டம் என்று தலைநிமிர்ந்து நின்றவர். எதிர்த்து வரும் அம்புகளைச் சந்திக்க தன்னைப் பழக்கிக் கொள்ளாதவர்.

பதறினார்... உணர்ச்சிவசப்பட்டார். ஆணவம் கரைந்தது. மமதை ஆவியானது. தோல்வி புரிந்தது.

இப்போது அவருக்குத் துணை தேவைப்பட்டது. தன்னுடைய உணர்ச்சிகளைக் கொட்ட ஒரு முகம் தேவைப்பட்டது. இப்போதெல்லாம் வசுதாவுடன் அடிக்கடி பேசுகிறார். கருத்துக்களைப் பகிர்ந்து கொள்ளத் துடிக்கிறார். அவள் அபிப்பிராயங்களைக் கேட்கிறார்.

இது என்ன திடீர் மாற்றம்? நரைமுடிதான் காரணமோ? அல்லது இயலாமையின் வெளிப்பாடா?

வசுதாவின் மனம் சிரித்தது. சந்தர்ப்பம் கிடைக்கும்போதெல்லாம் வார்த்தைகளினால் அவரை ரணப்படுத்தினாள்.

பழைய ரகுராமாக இருந்திருந்தால் சீறியிருப்பார். இது அடிபட்ட பாம்பு. அடைக்கலத்துக்காக அலைபாய்கிறது.

'படட்டும்! இத்தனை வருடங்களாக நான் அனுபவித்த மரண வேதனைகளை, ஆவிட் எரிச்சல்களை இவரும் கொஞ்சம் அனுபவிக்கட்டும். என் ஆழ்மனத்தில் உருவாகியிருக்கும் காயங்களுக்கு இதுதான் மருந்து!'

ரகுராம் குனிந்த தலைநிமிராமல் உட்கார்ந்திருந்தார்.

அவரையே பார்த்துக் கொண்டிருந்தாள் வசுதா. கொஞ்சம் கொஞ்சமாக அவளுக்குள் குற்ற உணர்வு பிறந்தது.

'தவறு செய்கிறோமோ?'

மனம்தான் உயிர். அதை இம்சிப்பது சரிதானா? அன்று ரகுராம் செய்த அதே உணர்வுக் கொலைகளைத்தான் இன்று வசுதாவும் செய்கிறாளோ? அவனைப் போலவே அவளும் ஒரு வெஜிடபிள் ஆகத்தான் வேண்டுமா?

சிறிது நேரம் அப்படியே நின்றிருந்தாள் வசுதா. மனப் போராட்டத்துக்கு விடை கிடைத்தது போலிருந்தது.

கணவரின் அருகில் சென்றாள்.

"என்னங்க... ஸாரி!"

ரகுராம் மெதுவாக அவளை நிமிர்ந்து பார்த்தார். கண்கள் பனித்திருந்தன. இதுநாள் வரை வசுதா பார்க்காத ஒன்று. சின்னத் தாக்குதலைச் சந்திக்கக் கூட திராணி இல்லாத பலஹீனமான நிலை. அவருக்குத் தேவை அன்பு, ஆறுதல்... அதை இப்போது வசுதாவால் மட்டுமே கொடுக்க முடியும்.

வசுதா முந்தானையால் அவர் கண்ணீரை ஒற்றி எடுத்தாள். அவர் முகத்தை தன்னோடு ஆதரவாக அணைத்துக் கொண்டாள்.

சிறு குழந்தை போல் ரகுராமும் அவளுடன் ஒண்டிக் கொண்டார்.








* மிமியுடன்
பாபன்ட்ரியூ

# ஒரு கிழவரும் மூன்று பெண்களும்!

ஒரு எழுபத்தாறு வயது ஸ்டைலான கிழவர், அவரைச் சுற்றி மூன்று பெண்மணிகள் - இதுதான் கிரீஸ் நாட்டு அரசியலாக இருந்தது ஆறுமாதம் முன்பு வரை.

சோஷலிஸ்ட் கட்சிதான் ஆளுங்கட்சி. இருபது வருடங்களுக்கு மேலாக கிரீஸ் அரசியலில் கொடி கட்டிப் பறந்தவர் பாபன்ட்ரியூ. நாகரிக வாழ்வில் நாட்டம் கொண்டவர். மது, மாது இரண்டின் மீதும் கொள்ளைப் பிரியர்!

இவர் வாழ்க்கையில் மூன்று பெண்கள்: மார்கரெட், பாவம் சமர்த்து. இவர் பாபன்ட்ரியூவின் முதல் மனைவி. அரசியல் பக்கம் தலை வைத்துப்படுப்பதில்லை. தானுண்டு, தன் வீடு உண்டு, தனது வளர்ந்த நான்கு குழந்தைகள் உண்டு என்று இருப்பவர்.

டிமிட்ரா. இவரைப் பற்றி கொஞ்சம் சொல்ல வேண்டும். கிழவரின் இரண்டாவது மனைவி. இருவருக்கும் வயது வித்தியாசம் அதிகமில்லை. முப்பத்தேழுதான்! மிமி என்றும் இவருக்கு ஒரு செல்லப்பெயர். முன்னாள் விமானப் பணிப்பெண். அழகி. கவர்ச்சிக்குப் பெயர் போனவர். வேறு பலருடன் இவர் அடித்த லூட்டிகளையெல்லாம் அந் நாட்டுப் பத்திரிகைகள் போட்டோ போட்டு வெளிச்சம் காட்டின. மிமி இதற்கெல்லாம் மசியவில்லை. பிரதமரின் இளம் மனைவியாயிற்றே!

பிரதமர் பதவி மீது மிமிக்கு ஒரு கண். எப்படியும் கணவருக்குப்பின் அரியணை ஏறிவிட வேண்டும் என்ற துடிப்பு உண்டு.

இன்னொரு பெண்மணி வஸ்ஸோ பாபன்ட்ரியூ. பாபன்ட்ரியூ என்ற பெயரைப் பார்த்து 'ஓஹோ... ஐயாவின் இன்னொரு சின்ன வீடாக்கும்' என்று நினைத்து விடக் கூடாது. அவருக்கும் இவருக்கும் எந்தச் சம்பந்தமும் இல்லை! அரசியலில் பாபன்ட்ரியூவின் சிஷ்யை இவர். அவ்வளவுதான்! சமூக நல அமைச்சராக இருந்தவர். ஐரோப்பிய யூனியன் விவகாரங்களில் கிரீஸ் நாட்டுப் பிரதிநிதி போலச் செயல்பட்டவர். ஐரோப்பா எங்கும் செல்வாக்குள்ள பெண்மணி.

மிமி பதவியைப் பிடிப்பதற்குள் தான் பிடித்து விட வேண்டும் என்று வஸ்ஸோவுக்கு ஒரு ரகசிய ஆசை இருந்தது உண்மை. சென்ற வருட இறுதியில் பாபன்ட்ரியூ இரண்டு மாத காலம் சீரியஸாக நோய் வாய்ப்பட்டார். 'இனி தேறாது' என்கிற அளவுக்குப் போய்விட்டது.

'பதவி விலகு' என்று நாடு முழுவதிலும் குரல் எழுந்தது. ருசி கண்ட பூனைக்குப் பாலை விட்டு விட முதலில் மனமில்லை.

எதிர்ப்புக்குரல் ஓங்கி ஒலிக்கவே, வேறு வழியின்றி இவ்வருடம் ஜனவரி 15-ஆம் தேதி தன் பிரதமர் பதவியை பாபன்ட்ரியூ ராஜினாமா செய்தார். (இக்கட்டுரை அச்சாகிற நேரம் அவர் உயிரோடு இல்லை! மாரடைப்பால் மரணம்!)

அதே சோஷலிஸ்ட் கட்சியைச் சேர்ந்த கோஸ்டாஸ் சிமிடிஸ் பிரதமரானார். தன்னை எதிர்த்துப் போட்டியிட்ட துணைப் பிரதமர் ஜோசாடோ பெனலஸ் (கிரேக்கர்களுக்கு மூக்கு மட்டுமா நீளம்? பெயரும் கூடத்தான்) என்பவரை விட 11 வாக்குகள் அதிகம் பெற்று வெற்றி பெற்றார்.

இப்போது கிரீஸ் நாடு முழுவதும் பலமான எதிர்ப்பு. சிமிடிஸ் நமது மன்மோகன்சிங் மாதிரி. தாராளமயமாக்கல், தனியார் பங்கேற்பை அதிகரித்தல் போன்று நாட்டின் பொருளாதாரத்துக்குப் புதிய பரிமாணம் கொடுத்து நாட்டைக் கரை சேர்ப்பார் என்று மக்கள் நம்பிக் கொண்டிருக்கிறார்கள்.

சரி, மிமியும் வாஸ்ஸோவும் என்ன ஆனார்கள்?

வாஸ்ஸோவுக்கு மறுபடியும் அமைச்சர் பதவி தரப்பட்டிருக்கிறது.

மிமிதான் அம்பேல். 'ஆடிய ஆட்டமென்ன' கதையாய் இப்போது அடங்கிப் போயிருக்கிறார். புத்தகம் எழுதப் போகிறாராம்.

— ராணிமைந்தன்

# ஆன்லைன் இருக்க கவலை எதற்கு?

''ஹலோ''. குரல் கேட்டு திரும்பிய கணேஷின் முன் அவனது கல்லூரி நண்பன் வசந்த் நின்று கொண்டிருந்தான்.

''டேய் வசந்த் நீயா? போபால்லதானே வேலை செஞ்சுக்கிட்டிருந்தே?'' என்று வியப்புடன் கேட்டான் கணேஷ்.

''ஆமா மாப்ளே. போபால்ல தான் வேலை செஞ்சுக்கிட்டிருந்தேன். திடீர்னு எங்க மாமா தன் பொண்ணை எனக்கு கட்டிக் கொடுத்ததோட மெட்ராஸ்ல ஒரு வேலையையும் வாங்கிக் கொடுத்திட்டார். சரின்னு, வேலையை ராஜினாமா பண்ணிட்டு மெட்ராஸ்லேயே செட்டிலாயிட்டேன்'' என்றான் வசந்த்.

''சரிடா, மெட்ராஸ் வந்தியே ஒரு லெட்டர் போடக் கூடாது? சரி. என்ன விஷயமா இந்தப் பக்கம் வந்தே?'' என்றான் கணேஷ்.

''நான் ராஜினாமா பண்ண கம்பெனியிலிருந்து என்னோட பழைய பாக்கியை செட்டில் பண்ணாங்க. கணிசமா ஒரு தொகை கிடைச்சது. அதை கையில வைச்சுக்கிட்டிருக்க பயமாயிருக்கு. ஒண்ணு திருட்டு பயம். அடுத்தது நானே செலவு பண்ணிடுவேனோன்னு...''

''அப்ப ஒரு நல்ல ஃபைனான்ஸ் கம்பெனியிலே முதலீடு பண்ணிடு. நான் Online Finance-ல முதலீடு பண்ணியிருக்கிற மாதிரி!'' என்று தீர்வு தந்தான் கணேஷ்.

''ஆன்லைன்? அப்படி என்ன அவங்க பண்றாங்க?''

''அவங்களோட தனிப்பட்ட முறையில் செய்யும் சேவை. மற்றும் அவங்களோட தேர்ந்தெடுத்த தொழில்முறை டெபாசிட்தாரர் களுக்கு நிச்சயம் பிடிக்கும். ஆன்லைனின் 'CARE A(FD) RATING' உன்னோட பணத்துக்கு முழுப்பாதுகாப்பளிக்குது! ஆன்லைனோட வட்டி விகிதம் RBI-யோட சட்ட திட்டங்களுக்கு உட்பட்டதாலே நியாயமான வட்டி 'டாண்'னு வந்துடும். என்னோட சகலை அமெரிக்காவுல வேலை செய்யறார். அவர் ஒரு NRI. அவரும் அவரோட கூட வேலை செய்யற சில NRIs-ம் ஆன்லைன்ல டெபாசிட் பண்ணியிருக்காங்க. என்னோட சிங்கப்பூர் சித்தப்பா கூட ஒரு NRI-தான். அவரும் ஆன்லைன்லதான் டெபாசிட் பண்ணியிருக்கார். NRIs எல்லாம் ஆன்லைன் மேலே எவ்வளவு நம்பிக்கை வெச்சிருக்காங்கன்னு இதிலிருந்தே உனக்குத் தெரியும்.''

''சரி கணேஷ், எனக்கு அந்தக் கம்பெனிப் பத்தின விவரங்கள் வேணுமே. எப்படி கிடைக்கும்?''

கணேஷ் தனது பர்ஸை பிரித்து ஆன்லைனின் கார்டை எடுத்து ''வசந்த், நீ 8276768/8265301/8234072-ன்ற டெலிபோன் நம்பர்ல இல்லேன்னா 8267008-ன்ற ஃபேக்ஸ் நம்பர்ல ஆன்லைன் தொடர்பு கொண்டா உனக்குத் தேவையான விவரங்கள் உன் வீட்டிற்கே வந்து சேரும். ஆனா ஒண்ணு மட்டும் சொல்றேன். ஆன்லைனோட தனிப்பட்ட சேவையை உணர்ந்துட்டேன்னா, நீயே மத்தவங்களுக்கு ரெகமண்ட் பண்ணுவே. சரி, சரி. வண்டியில ஏறு. என் வீட்டுல உன்னை அறிமுகப் படுத்தறேன்.''

''உன் வீட்டிற்குப் போறதுக்கு முன்னாடி ஒரு போன் பண்ணணும். எங்கேயாவது ஒரு டெலிபோன் பூத்துல வண்டிய கொஞ்சம் நிறுத்து'' என்றான் வசந்த்.

''வீட்டிற்கு ஏதாவது அவசரமா பேசணுமா?'' என்று கேட்டான் கணேஷ்.

''போன் வீட்டுக்கில்லை. ஆன்லைனுக்கு!'' என்றபடி விசிலடித்தான் வசந்த்.



**CARE 'A' RATING**




**ஆன்லைன் ஃபைனான்சியல் சர்வீசஸ் லிமிடெட்**

248, இராயப்பேட்டை நெடுஞ்சாலை,
சென்னை-600 014.
தொ.பே.: 8276768/8265301/8234072
ஃபேக்ஸ்: 8267008

இந்த விளம்பரம் இந்து நாளிதழில் 29.1.96 அன்று வெளிவந்த சட்டபூர்வமான விளம்பரத்தின் தொடர்ச்சியே. இந்த விளம்பர வாசகம் டெபாசிட் விண்ணப்பப்படிவத்திலும் அச்சிடப்பட்டுள்ளது. டெபாசிட் செய்வதற்கு முன் இதை கவனத்தில் கொள்ளவும்.

**கூ**டத்தில் வரிசையாக வைக்கப்பட்டிருந்த பொருட்களை குணாளன் மேற்பார்வை இட்டார்.

வெற்றிலை, மஞ்சள் பொடி, சந்தனம், புஷ்பங்கள், பழங்கள், தேங்காய்...

அவருடைய ஒரே பெண் மீனாவுக்கு அன்று பதினெட்டாவது பிறந்த நாள். கோவிலுக்குச் சென்று விசேஷ பூஜை செய்வது வழக்கம்.

மீனாவுக்காகத்தான் இத்தனையும். அவளுக்குக் கல்யாணம் ஆகும்போது, கோவிலிலும் ஒரு கல்யாணத்தைச் செய்து வைக்கலாம் என்று நினைத்தவுடன் புளகாங்கிதத்துடன் புன்னகை புரிந்தார்.

குணாளனுக்கும் புனிதாவுக்கும் திருமணம் முடிந்து ஒரு மாமாங்கம் சென்றும் குழந்தை பாக்கியம் ஏற்படவில்லை. அவருடைய தாயாதி குடும்பத்தைச் சேர்ந்த ஒரு வயதான கிழவி, கோவிலில் சிலை ஒன்று செய்து வைத்தால், உடனே குழந்தை பிறக்கும் என்று சொன்னாள்.

குணாளன் அப்படியே வேண்டிக் கொண்டார். அவர் பிரார்த்தனை பலித்து விட்டது. மீனா சுவர்ண பிம்பமாகப் பிறந்தாள். பெரிய வடிவில் பஞ்சலோகத்தாலே, கையில் அகல் ஏந்திய தோற்றத்துடன் பாவை விளக்குச் சிலை ஒன்றைச் செய்து, அந்த ஊர் கோவிலுக்கு பல்லக்கில் ஊர்வலமாகக் கொண்டு போய் அம்பாளின் சந்நிதியின் எதிரில் பிரதிஷ்டை செய்து, முறைப்படி விழா கொண்டாடினார், குணாளன்.

அத்துடன் அவர் நிறுத்தவில்லை. மீனாவின் பிறந்த நாள், அவள் பள்ளி வகுப்பி தேறிய நாள், மஞ்சள் நீராட்டு விழா, நடன அரங்கேற்ற நாள் என்று மீனா சம்பந்தப்பட்ட விஷயங்களுக்கெல்லாம், அந்தச் சிலைக்கு பெரிய அளவில் விழா நடத்தினார்.

“**எ**ன்ன கண்ணு? இன்னும் புதுப் புடைவையை நீ உடுத்தலியா? நேரமாச்சு... கோவிலுக்குப் போகணுமே!”

“அப்பா, என் காலேஜ் ஃப்ரெண்ட் ஒருத்தி இந்த பூஜையைப் பார்க்க ஆசைப்பட்டா... அவளை வரச் சொல்லி இருக்கேன்...”

“நேரமாச்சுதில்லே... அவ எப்பொ வந்து எப்பொ புறப்படறது?”

“நீங்க கிளம்புங்க. நான் பின்னாலயே வந்துடறேன்!”

தம்பதியர் கூடத்தில் இருந்த பொருட்களை காரில் ஏற்றிக் கொண்டு புறப்பட்டு விட்டனர்.

**கோ**விலை நெருங்கினதும் இருவரும் அதிர்ச்சி அடைந்தனர். கோவில் தர்மகர்த்தா, இரண்டொரு குருக்கள் ஓடி வந்தனர்.

“ஐயா, மோசம் போச்சு... உங்க சிலை... இல்லே... நீங்க செய்து வைச்ச சிலை கொள்ளை போயிடுச்சு...”

“ஐயோ தெய்வமே” - புனிதா மயக்கமாகி காரில் சாய்ந்தாள். குணாளன் அடிவயிற்றில் ஏதோ வேதனை செய்வதை உணர்ந்தார்.

“இன்னிக்கு போது சாயற நேரத்துக்குள்ளே கண்டு பிடிச்சாகணும்...னு சொல்லுங்க, போலீஸ் கிட்டே... இவளை வீட்டிலே கொண்டு



தள்ளிட்டு, என் பொண்ணு இங்கே வராமல் தடுத்து நிறுத்திட்டு மறுபடியும் நான் வரேன்... என் குழந்தைக்கு இது தெரிஞ்சுது... தாங்கவே மாட்டா...”

**கா**ர் திரும்பியது. வீட்டின் எதிரில் இறங்கியதும், டிரைவர் உட்பட மூவரும் அதிர்ச்சி அடைந்தனர். வீடு பூட்டிக் கிடந்தது.

“அங்கிள், மீனாக்கா ஆட்டோவில் போயிடுச்சு... உங்ககிட்டே இந்த கவரையும், வீட்டு சாவியையும் கொடுக்கச் சொல்லிச்சு...” ஒரு சிறுவன் ஓடி வந்து தந்தான்.

குணாளன் அவசரமாக ஒட்டிய கவரைக் கிழித்து கடிதத்தைப் பிரித்துப் படித்தார்.

“டியர் டாடி, என்னைத் தேடாதீங்க... என் பிறந்த நாள் புடைவை, கல்யாணப் புடைவையாக மாறிவிட்டது. வேறு கோவிலில் என் கல்யாணம் நடக்கிறது. அந்தஸ்திலும், செல்வத்திலும் உங்களை விடக் கீழ் மட்டத்தில் இருக்கும் ஒரு உத்தமரை நேசிக்கும் நான், அவரை நீங்க மாப்பிள்ளையாக ஏற்றுக் கொள்ள மாட்டீர்கள் என்று தெரிந்து கொண்டு, இப்படி வெளியேறுகிறேன். மன்னிக்கவும்...”

— கமலா சடகோபன்

● கே.எம். கவிட்முருகன்,
பெருகோபனபள்ளி.
*? இன்று பத்திரிகை உலகம் யார் கையில்...?*
! அன்றும், இன்றும், என்றென்றும் வாசகர்கள் கையில்!

● எஸ். வைத்தியநாதன், மதுரை - 14.
*? 'அகில உலக சிறந்த மனிதர்' பட்டத்தை அமெரிக்காவில் வென்று வந்த நடராஜன் இவ்வளவு அநாகரிகமாக நடந்து கொண்டிருக்கிறாரே?*
! ஜெ. கூடத்தான் 'உலகின் தலைசிறந்த பெண்மணி' விருது பெற்றார்... 'செட் அப்' பட்டங்களால், விருது பெறுபவர், கொடுப்பவர் - இருவருக்குமே மதிப்பு குறையுமே யன்றி, கூடாது.


• சாமர்த்தியமாக....


• பிடிவாதமாக....

# கௌடாவை ராவ் மிரட்டுகிறாரே...?


• பட்டம் பெற்றும்....


• எச்சரிப்பதற்காக....

● எல்.எம். மங்கை, மதுரை - 16.
*? போக்குவரத்து சட்ட மீறலுக்கான உடனடி அபராதம் (Spot fine) ரத்து செய்யப்பட்டது பற்றி...?*
! ஸ்பாட் ஃபைனால் அரசுக்கு லாபமில்லை. போக்குவரத்து போலீஸார்தான் லஞ்ச மழையில் குளித்து வந்தார்கள். எனவே உடனடி அபராதம் ரத்து செய்யப்பட்டதை வரவேற்கலாம்.

● புளியரை கணேசன், சென்னை — 30.
*? மக்கள் விரோதப் போக்கில் ஈடுபட்டால் ஆதரவை வாபஸ் பெறுவோம், என கௌடாவை ராவ் மிரட்டியிருக்கிறாரே...?*
! மக்கள் விரோதமா, மகன் விரோதமா...?!

● எஸ். நாரம்புநாதன், சின்ன காஞ்சிபுரம்.
*? 'சமூக நீதி'– விளக்கம் தருக...?*
! அம்மா போனதும் அது தப்பிப் பிழைத்தது!

● பி. ஜெயப்பிரகாஷ், சர்க்கார்ப்பதி.
*? 'தமிழ் அரசி'யில் நடராஜன் எழுதும் 'நெஞ்சம் சுமக்கும் நினைவுகள்' தொடர் பற்றி உங்கள் கருத்து...?*
! அடுத்தபடியாகச் சிறை அனுபவங்களை எழுத வாய்ப்பு உள்ளது!

● இரா. திலீப், திருச்சி - 14.
*? கலைஞரின் தொடர் நடவடிக்கைகள் பாராட்டும் விதத்தில் உள்ளனவே...?*
! கும்பாபிஷேக அழைப்பிதழில், ஆண்டவன் படத்தை விட அவர் படத்தைப் பெரிதாக அச்சிட்டதற்காக, சம்பந்தப்பட்ட அதிகாரியை சஸ்பெண்ட் செய்தது பிறரை எச்சரிப்பதற்காக என்றே தோன்றுகிறது. முந்தைய ஆட்சியின் வழிகாட்டலினால் அந்த அதிகாரி அப்படி நடந்து கொண்டிருப்பாரேயானால் மனிதாபிமானம் காட்டுவது நல்லது.

● ஈ.டி. விஜயகுமார், ஈரோடு.
*? தேசிய கீதத்தை மீண்டும் திரையரங்குகளில் ஒலிபரப்பச் செய்தால் தேசபக்தி வளருமா...?*
! திரையரங்குகளில் தேசிய கீதம் ஒலிப்பதால் மட்டுமே தேச பக்தி வளராது. பள்ளிகளில் தேச பக்திப் பாடல்களைப் பாட சிரத்தையுடன் கற்றுத் தருவதன் மூலம் அதை இளம் நெஞ்சங்களில் விதைக்க முடியும். பெருமிதம் கொள்ளக்கூடிய நல்ல தலைமை நாட்டை வழி நடத்தும்போது அந்த விதை துளிர்த்து வளரும்.

● ஏ. பாலமுருகன், திருநெல்வேலி – 8 ❐
*? கடன் வாங்கும் பலரிடம், 'கடன் வாங்காமல், வருவாய்க்கு ஏற்ப செலவு செய்யுங்கள்' என்று அறிவுரை கூறினால், 'இந்தி*



* விஷமத்தனமாக...

* நிலைப்பதற்காக....



யாவே கடன் வாங்குது, நான் வாங்கினால் என்ன?" என்று திருப்பிக் கேட்கிறார்களே...?

! கடனாளியாவது வேறு; கடன் பெற்று மூலதனமாக்கி, செழித்து வளர்ந்து அதைத் திருப்பிச் செலுத்துவது வேறு. இரண்டாவது வழியைப் பின்பற்ற, அதற்குரிய சாமர்த்தியம் இல்லாதவர்கள், சிக்கனத்தைக் கடைப்பிடித்து வரவுக்குள் செலவு செய்து சேமிப்பதே சிறந்தது. இந்திய அரசோ இரண்டு வழிகளும் தெரியாததாக இருக்கிறது... அதுதான் சோகம்!

● **என். ஜெயராமச்சந்திரன், கோவில்பட்டி.**

? *தனிமையிலே இனிமை காண முடியுமா...?*

! தாராளமாக! சொல்லப்போனால் ஒவ்வொரு மனிதனும் தினமும் சில நிமிடங்கள் ஒதுக்கி, தனியே இருந்து சிந்திக்கவும் சிந்தனையைக் கட்டுப்படுத்தி தியானத்தில் ஆழ்ந்து போகவும் பழக வேண்டும்.

● **அ.க. கிருஷ்ணன், சென்னை - 39.**

? *சசிகலாவுக்கெல்லாம் கல்கி அட்டைப்பட இடத்தை ஒதுக்குவது எந்த விதத்தில் நியாயம்...?*

! அட்டைப்படம் என்பது செய்தியில் பரபரப்பாக அடிபடுகிற நபரைக் குறித்து அமைவது வழக்கம்தான். அது, சம்பந்தப்பட்ட நபரை கௌரவிப்பதாகவும் இருக்கலாம்; குற்றம்-குறைகளை எடுத்துக் காட்டுவதாகவும் இருக்கலாம். ஓ.ஜே. சிம்ஸனை அட்டையில் போடாத அமெரிக்கப் பத்திரிகை உண்டா? கல்கி அட்டைப் படத்தில் ஹிட்லர், முசோலினி உள்பட பல 'ஆன்டி ஹீரோக்கள்' இடம் பெற்றதுண்டு. மேலும்... நேற்று கௌரவத்துக்குரிய நபராகக் கருதப்பட்ட ஒருவர், இன்று மதிப்பிழந்து போகலாம் இல்லையா....? உதாரணம்: ராவ்!

● **எஸ்.ஆர். ஸ்வாமி, திருநெல்வேலி -11.**

? *பங்களாதேஷில் ஏற்பட்டுள்ள மாற்றம் நிலைக்குமா...?*

! ஊழல் சாம்ராஜ்யம் சரிந்ததில் மகிழ்ச்சி; முஜிபுர் மகள் ஹஸினா நல்லாட்சி வழங்குவார் என்பது எதிர்பார்ப்பு; துணைக்கு எர்ஷாத்தின் கட்சியும் இருப்பதால் புதிய ஆட்சி நிலைப்பது சாத்தியமே.

● **இ. மகாராஜன், சின்னமனூர்.**

? *காஷ்மீர் பிரச்னை குறித்துப் பேசித் தீர்க்க நாம் அதிக ஆர்வமுடன் இருப்பதாக பேனசிர் பூட்டோ குறிப்பிடுகையில், மேற்கு-கிழக்கு ஜெர்மனிகளின் இணைப்பைச் சுட்டிக் காட்டியிருக்கிறாரே...?*

! வடிகட்டின விஷமத்தனம்! ஜெர்மனி துண்டாடப்பட்ட சூழ்நிலையும், காஷ்மீர் பாகிஸ்தானால் ஆக்கிரமிப்புக்கு உள்ளானதும் ஒன்றாகிவிடாது.

● **பா. குமார், தொட்டப்பநாயக்கனூர்.**

? *பிரதமருக்குச் சுத்தமாக ஹிந்தி தெரியாதாமே...?*

! ஆங்கிலமும் அவ்வளவாகத் தெரியாது என்பதை அவர் உபயோகிக்கும் சில சொற்கள் நிரூபிக்கின்றன. தெரிய வேண்டும் என்ற அவசியம் இல்லை... கன்னடத்திலேயே பேசி, மொழிபெயர்க்கச் சொல்லலாம். டெல்லிக்கு வந்த சிப்கோ இயக்கத் தலைவர் பகுகுணாவைச் சந்தித்தபோது கன்னடத்தில்தான் பேசியிருக்கிறார் பிரதமர். டெஹ்ரி அணைத் திட்டம் மறு பரிசீலனைக்குள்ளாகும் என்று உத்தரவாதம் அளித்திருக்கிறார்.

● **பாலசுப்ரமணியன், செங்குன்றம்.**

? *இந்தியா அணுகுண்டு தயாரிக்க வேண்டும் என்ற வாஜ்பாயியின் கருத்து குறித்து...?*

**☐ ரூ. 25 பரிசு பெறுபவர்:**
**ஏ. பாலமுருகன்,**
**19, அனவரத சுந்தர விநாயகர் கோயில் தெரு,**
**பழையபேட்டை, காந்தி நகர் அஞ்சல்,**
**திருநெல்வேலி - 627 008.**

! பி.ஜே.பி.யின் சில தவறான கொள்கைகளுள் ஒன்று!

● **ஏ. குமாரவேலு, பாளையங்கோட்டை.**

? *சட்டம் தன் கடமையைச் செய்யும் என்று கூறிய ராவின் பேச்சு அவருக்கே திரும்பும் போலிருக்கிறதே...?*

! திரும்பிக் கொண்டுதான் இருக்கிறது! ஆனால், குற்றச்சாட்டுக்கு உள்ளானவர்கள் பதவியில் நீடிக்கக் கூடாது என்ற அவருடைய கொள்கை மட்டும் அவர் விஷயத்திலேயே பொய்த்துப் போய்க் கொண்டிருக்கிறது!

● **லஷ்மி பாலகிருஷ்ணன், மதுரை - 9.**

? *தமது பாராளுமன்றத் தேர்தல் போன்று ரஷ்ய அதிபர் தேர்தலிலும் தனி மெஜாரிடியை மக்கள் அளிக்காதது பற்றி..?*

! மூன்றாவது நபருக்கு- (ஜெனரல் லெபெட்) பாதுகாப்பு ஆலோசகர் பதவி தந்து, சாமர்த்தியமாகத் தம்முடன் இணைத்துக் கொண்டுவிட்டார் யெல்ட்ஸின். குழி தோண்டிப் புதைக்கப்பட்ட தீவிர கம்யூனிஸம் மீண்டும் தலைதூக்காத வகையில் ஜுகனோவ் தோற்றது (மயிரிழையிலானாலும்) ஆறுதல் அளிக்கும் விஷயம்.

# வீட்டுக்கு வரும் மருத்துவமனை!

மூன்றாவது மாடியில் குடியிருக்கும் தங்கையாவுக்கு நடுராத்திரி மூச்சுத் திணறல் அல்லது (நிஜ) நெஞ்சுவலி. அல்லது வேறு ஏதோ சங்கடம். உடனடியாக டாக்டர் கவனித்தாக வேண்டும். யார் அகாலத்தில் வீட்டுக்கு வருவார்கள்? உடனே நர்ஸிங் ஹோமுக்கு அள்ளிக்கொண்டு போக வேண்டும். ஆள் துணை வேண்டும். ஆட்டோ, டாக்ஸி பிடிக்க வேண்டும். நர்ஸிங் ஹோமில் உடனே கவனித்தால் தான் ஆயிற்று.... அதற்குள்...?



வீட்டுக்கே வந்து...



• சேவையில் மருத்துவமனை

பயம் நெஞ்சில் கூடுகட்டுகிறது அல்லவா? ஆனால் இனி அத்தகைய பயத்துக்கு அவசியமில்லை என்கிறது 'யூனிக் ஹோம் ஹெல்த் கேர்' அமைப்பு. யாருக்கு எந்த நோய் என்றாலும் சரி, எந்த நேரமாயினும் சரி. ஒரு போன் செய்தால் போதும். ஒரு டாக்டர், நர்ஸ், உதவியாளர் தவிர ஈ.ஸி.ஜி, ட்ரிப் ஏற்றுதல், ஸ்கேனிங் என எந்த ஒரு தேவைக்கும் அங்கே இங்கே அலைய வேண்டியதில்லை. கையோடு கொண்டு வந்து விடுவார்கள்.

"ஆயிரம் ரூபாய் கட்டணம் செலுத்தி, பதிவு செய்து கொண்டு விட்டால் போதும். ஒரு மாதத்தில் உறுப்பினர் எண் தரப்பட்டு, சேவை தொடங்கிவிடும்" என்கிறார் எஸ்.வி.ரவி.

இந்த அமைப்பைத் தம் நண்பர்களுடன் சேர்ந்து தொடங்கி இருப்பவர்.

ஒரு மலேரியாக் காய்ச்சல் சமயம் ஓரிரவு டாக்டர் கிடைக்காமல் அலைந்த அனுபவம் இவருக்கு இந்த ஐடியாவைத் தந்திருக்கிறது. அஃப்கோர்ஸ், வெளிநாடுகளில் ஏற்கெனவே புழக்கத்தில் உள்ள முறைதான் என்றாலும் இந்தியாவில் - அதுவும் சென்னையில் இதுதான் முதல்!

விரைவில் மதுரை, ஹைதராபாத், திருப்பூர் என்று கிளை விடப் போகிற

இந்த மொபைல் மருத்துவமனையில் என்ன ஸ்பெஷல்?

"சாதாரணமாக ஒவ்வொரு அழைப்புக்கும் ஒரு மணி நேரமாவது தங்கி, பரிசோதிக்கிறோம். நர்ஸிங் ஹோம் என்றால் இப்படி ஒவ்வொருவருக்கும் அதிக நேரம் செலவிட முடியாதே. தவிரவும் முதியவர்களுக்கு, ஒரு இடத்துக்குப் போய்க் காத்திருந்து, டாக்டர் பார்ப்பதைவிட இது திருப்தியாக இருக்கிறது. 'ட்ரிப்' உட்பட வீட்டிலேயே போய்க் கொடுத்து விடலாம்! கையடக்கமான ஈ.ஸி.ஜி கருவிகள் இருக்கின்றன. ஸ்கேனிங் கூட வீட்டிலேயே போய்ச் செய்து விடுகிறோம். எக்ஸ்ரே மட்டும்தான் இப்போதைக்கு எடுக்க வசதியில்லை. அதையும் சாதிக்க முயன்று வருகிறோம்" என்கிறார் இந்த அமைப்பின் மெடிக்கல் டைரக்டர் டாக்டர் கே. ஸ்ரீராம்.

மருத்துவமனைகளுக்குப் போய்ச் சேர்ந்து செய்து கொள்வதற்கு ஆகும் செலவைவிட இந்த 'ஹோம் கேர்' முறையில் செலவு மிகவும் குறைவு என்பதால் இன்ஷியூரன்ஸ் நிறுவனங்களும் மேலை நாடுகளில் இம்முறையை அங்கீகரித்துள்ளன. சென்னை அமைப்புக்கும் 'நியூ இண்டியா அஷ்யூரன்ஸ்' நிறுவனம் ஏற்பளித்திருக்கிறது!

அமெரிக்காவிலுள்ள பென்ஸில்வேனியாவில் இயங்கும் 'மெடிஸ்ஸின்' அமைப்பின் தலைவரான ஆலி வாரிஸ் என்பவர் இந்த வகையான வீட்டு மருத்துவ உதவித் துறையில் நீண்ட அனுபவம் பெற்றவர். அவருடைய ஆலோசனைகளை இந்தச் சென்னை அமைப்பினர் பெற்றுப் பயனடைந்திருக்கிறார்கள்.

அழைப்பின் பேரில் செல்லும் மருத்துவர் குழு, தேவை ஏற்பட்டால் உரிய மருத்துவ மனைகளில் உடனடியாகச் சேர்க்கவும் உதவுகிறார்கள். இவர்களோடு இணைந்து செயல்பட அப்போலோ, தேவகி, மலர் போன்ற அரை டஜன் மருத்துவமனைகள் முன் வந்துள்ளன. நோயுற்றவர், குடும்பத்தாரின் விருப்பத்தின்படி இந்த மருத்துவமனைகள் எதிலும் சேர்த்து தீவிரச் சிகிச்சை பெறலாம் என்பதோடு மருத்துவச் செலவில் பத்து சதவிகிதம் சலுகையும் கிடைக்கிறது!

மகளிர் பேறு காலம், மற்றும் பெண்களின் பிரத்யேக உடல் கோளாறுகளுக்கு, முற்றிலும் பெண்களையே கொண்ட மருத்துவக் குழுவினர் வருவார்கள். முழு நேரக் கவனிப்புக்காக ஆயா வேண்டும் என்று கேட்டாலும் நாள் கட்டண அடிப்படையில் இந்த மையம் அனுப்பி உதவுகிறது.

ராமாவரத்திலிருந்து ஓர் இளம் பெண் கடுமையான வயிற்றுப் போக்கு, வாந்தி என்று அவதிப்பட்டபோது இவர்களின் குழு நள்ளிரவுக்குப்பின் ஒரு மணிக்குச் சென்று அதிகாலை ஐந்து மணிவரை இருந்து கவனிக்க வேண்டி வந்ததாம்! இந்த உடனடிக் கவனிப்பின் விளைவாக அந்தப் பகுதியில் கூடுதலான உறுப்பினர்கள் சேர்ந்துள்ளார்கள் என்கிறார் டாக்டர்.

உறுப்பினர்களுக்கும் அவர்களையொட்டி அக்கம்பக்கத்து நண்பர்களும் கூடப் பயன் பெறும் வகையில் முக்கியமான மருத்துவக் குறிப்புக்கள், எச்சரிக்கைகள், உணவு அட்டவணைகள் என்று அவ்வப்போது அனுப்பி வைக்கிறார்கள். 'மாஸ்டர் ஹெல்த் செக்அப்' திட்டமும் உண்டு. வீட்டுக்கே வந்து சோதனைக்கான இரத்தம் முதலியவற்றை எடுத்து, ஈ.ஸி.ஜி. போன்ற சோதனைகளைச் செய்து, விவரமான தகவல் தொகுப்பை மறுநாளே தந்து விடுகிறார்கள்.

"டாக்டர்கள் வீடு தேடி வருகிறார்கள் என்பதால் கொஞ்சம் கூடுதலான உரிமை எடுத்துக் கொண்டு 'டாக்டர்! நீங்க வர்றப்ப அப்படியே... இந்த... பத்திரிகை வாங்கிண்டு வரீங்களா?' என்று பேஷன்ட் கேட்கிற அளவுக்கு அன்னியோன்னியம் ஏற்பட்டு விடுகிறது" என்கிறார் ரவி!

— சுப்ரபாலன்

படங்கள் : யோகா



"அந்த பாகவதருக்கு ரொம்ப பெரிய மனசு..."

"தம்புரா, சுருதி பெட்டி இதுக்கெல்லாம் தனி ஆவர்த்தனம் விடும் போதே தெரியுது..."

— ஜூனியர் தேஜ்

# வீட்டு பட்ஜெட்!

விரிவான பட்ஜெட் போடப்போறதா நீ சொன்னதை நான் இப்படி எதிர்பார்க்கலை!

என்னா எழவாவது பட்ஜெட் போட்டுத் தொலைங்க. கேபிள் கனெக்ஷன் கட் பண்றது, பாக்கெட் மணி கட் பண்ற பிஸினஸ்லாம் வேணாம்...

... அப்புறம் நான் வெளி நடப்பு செய்ய வேண்டி வரும்!

பட்ஜெட் விவாதம் நடத்தணும்னு சொன்னது வாஸ்தவம்தான். அதுக்காக இப்படியா...?

மளிகை 600,
கேஸ் 200,
பால் 350, அரிசி 500
ஸ்கூல் ஃபீஸ் 2000,
400,
போதாம இந்த மாசமும்

நீங்க கொடுத்த மூவாயிரம் ரூபா, கணக்குப்படி என் செலவுக்கே சரியாப் போச்சு! உங்களுக்குத் தனியா வெச்சிருக்கீங்களா?

# சின்னத் திரையில் காணத் தவறாதீர்!

அடுக்குமாடிக் குடியிருப்பு ஜன்னல்கள் அகலத் திறந்திருக்கின்றன. எட்டிப் பார்க்கிற விடிகாலை வெளிச்சத்தில், பேப்பர் படிக்கிற சாக்கில் கண்ணாடி அணிந்த வயதான விழிகள் காலனியின் காம்பவுண்டுக்கு வெளியே நிலைத்திருக்கின்றன. வழக்கம் போல சோம்பலுடன் விடிந்திருக்கிற ஞாயிறு அல்ல இது. டெம்போவில் வந்து இறங்கியிருக்கிற ரிஃப்ளெக்டர்களும் அரபு தேசத்துப் பெண் போல, துணி மூடி நின்றிருக்கும் கேமராவும் நீளமான கேபிள் ஒயர்களும் பளபளப்பான, பெரிய அலுமினியக் கேரியர் மூடிகளைத் தாண்டி மணக்கும் பொங்கல், சாம்பார் வகையறாக்களும் இன்றைய தினத்துக்கு முற்றிலும் மாறுபட்ட தோற்றம் தந்திருக்கின்றன.

"மிஸ்டர் ராமபத்ரன், எத்தனை நாளைக்கு டி.வி. புரோக்ராம் மட்டுமே பார்த்துட்டு இருப்பீங்க? ஃபார் எ சேஞ்ச், இன்னிக்கு டி.வி. ஷூட்டிங் பார்க்கலாம்!"

கீழ்த் தளத்திலிருந்து, மூன்றாவது மாடியில் இருக்கும் ராமபத்திரனுக்கு உரக்கக் கேட்கிற ராம்குமாரின் குரல். சந்தோஷம் கொப்பளிக்கிற வேகம். இன்றைய தினம், அவன் யார் என்பது காலனிவாசிகளுக்குத் தெரிந்து விடப் போகிறது. ராம்குமார். அவன் வெறும் வங்கி குமாஸ்தா மட்டும் அல்ல. அவனுக்குள் இன்னொரு ராம்குமார் ஒளிந்திருக்கிறான். அழுக்கு ரூபாய் நோட்டுக்களை எச்சில் தொட்டு எண்ணுவது தவிரவும் அவனுக்கு வேறு சில கலைகள் தெரியும்.

'என் குரு, சிவாஜிகணேசன்!' என்று அவன் நெஞ்சு நிமிர்த்திச் சொல்கிறபோது அதில் ஒரு பரிமாணம் வெளிப்படும். தவிர, ஒரு தவம் போல் அவன் இலக்கியம் படைக்கிற நேர்த்திக்கு, வெளிவந்திருக்கிற அவனது நான்கு புத்தகங்கள் சாட்சி. ஆனால் தமிழ்த்திரு நாட்டில் திறமைக்குரிய அங்கீகாரம் தேட என்னவெல்லாம் கழைக்கூத்தாடி ஆட்டம் போட வேண்டி இருக்கிறது?

வீதி நாடகம், மேடை நாடகம், குறைந்த பட்ஜெட்டில் வெள்ளித்திரை முயற்சிகள் என்று பல குறைப்பிரசவங்களுக்குப் பின் அவன் பார்வை தொலைக்காட்சியின் மேல் விழுந்தபோது, கலை வளர்ப்பவர்களைக் கிட்டே சேர்க்க வேண்டாம் என்று எழுதாத சட்டம் ஒன்று அங்கே கொண்டு வரப்பட்டிருப்பதாக நம்பத் தகுந்த வட்டாரச் செய்திகள் சொன்னது.

"மிஸ்டர் ராம்குமார், உங்கள் ஸ்கிரிப்ட் பத்திரமாக இருக்கிறது. விரைவில் பரிசீலனை. அதனினும் விரைவில் முடிவு தெரிவிக்கப்படும். இப்போது கிளம்புகிறீர்களா?"

குளிர்சாதன அறையில், உட்காரக் கூடச் சொல்லாமல் விரல் நீட்டிப் பேசும் பிரேமலதா. கடவுளுக்கு அடுத்தபடி சக்தி வாய்ந்த தயாரிப்பு நிர்வாகி. அனுபவங்களின் அலைக்கழிப்பில் ராம்குமார் இது போல நூறு பிரேமலதாக்களைப் பார்த்தவன்தான். ஆனால் அலைக்கழிப்பு மட்டுமே வாழ்க்கை என்பது என்ன நியாயம்?

ஒரு வருடமாக தினசரி நிலையத்துக்கு வந்து போவதும் எதிர்ப்படுகிறவர்களுக்கெல்லாம் கும்பிடு போடுவதும் வரமறுக்கும் புன்னகையை வலிந்து இழுப்பதும் தேவ தேவா என்று லட்சார்ச்சனை புரிவதும்... கடவுளே, என்னை ஏன் ஒரு கலைஞனாகப் படைத்து விட்டாய்?

தூக்கம் வராத இரவுகளில் அவன், தன் மனைவியைத் தட்டி எழுப்பி 'எனக்கு என்ன குறை' என்று கேட்டான்.

லேசான முன் வழுக்கையும் வளையங்கள் தெரியும் மூக்குக் கண்ணாடியும் ஒரு பொருட்டல்ல என்று கருதுகிறபட்சத்தில் குறையொன்றுமில்லை என்றாள் அவள்.

அன்புள்ள தொலைக்காட்சி நிலைய இயக்குநர் அவர்களுக்கு, வணக்கம் என்று மகிழ்ச்சியுடன் தொடங்க இயலாத வருத்த எல்லைக்குத் தள்ளியிருக்கிறதைப் பொருட்படுத்துபவன் அல்ல, நான். ஆனாலும் ஓர் அரைமணி நேர நாடக அனுமதிக்காகச் சுமார் ஒரு வருட காலமாகப் படை எடுத்துக் கொண்டிருக்கும் என்னை நீங்கள் அறிவீர்கள். உங்களைப் பார்க்கிற போதெல்லாம் அரேபிய

அடிமைமகன் போலக் குனிந்து சலாமிடும் நூற்றுக் கணக்கான முகங்களில் மாறுபட்ட முகம் என்னுடையது. கிடைக்கிற சந்தர்ப்பங்களில், நேருக்கு நேர் சந்திக்கிற தருணங்களில், வலுக்கட்டாயமாக உங்கள் கரங்களை இழுத்து, அழுத்திப் பற்றிக் குலுக்கும் முறையிலேயே என் தன்னம்பிக்கையை நான் தெரிவித்திருக்கிறேன். தவிர, நீங்களே வார இதழ்களில் வந்த என் கதைகளைச் சிலாகித்திருக்கிறீர்கள். மூலவரே, உங்கள் உற்சவர்களைக் கொஞ்சம் அருள்பாலிக்கச் சொல்லக் கூடாதா?

மனத்தில் ஓடுகிற வரிகள் தபாலில் சேர்ந்த மறுவாரம் அவன் மறுபடி பிரேமலதாவைச் சந்திக்கப் போனபோது, அதுவரை கண்ணில் படாமல் எங்கோ தவமிருந்த அவனது ஸ்கிரிப்ட், தூசிக் கோலங்களுடன் அவள் டேபிள் மேல் இருந்தது. கடவுளே, படித்துவிட்டாளா? தயாரிப்புக்கு எடுத்துக் கொள்ளச் சொல்லி உத்தரவாகி விட்டதா?

''மிஸ்டர் ராம்குமார், உங்கள் ஸ்கிரிப்ட் பரவாயில்லை. நாடகமாக்கலாம் தான். ஆனால் நிலையம் அனுமதிக்கிற பட்ஜெட்டில் நீங்கள் எழுதியிருக்கிற அவுட்-டோர் காட்சிகளெல்லாம் சாத்தியமில்லை. கதை ஏன் நிறைய ஃப்ளாட்டுகள் உள்ள காலனியில் நடக்க வேண்டும்? ஒரு சின்ன வீட்டில் நடக்கிறது போல மாற்றிக் கொண்டு வாருங்கள். அப்புறம் ஒரு விஷயம். இதற்காக இயக்குநருக்கு ஒரு கடிதம் எழுதுவதென்றால், இதோ வெள்ளைப் பேப்பர், பேனா...''

விழிகளில் விரோதம் தேக்கிப் பேசும் பிரேமலதா. கடவுளே, எல்லாப் பெண்களும் ஏன் பூக்களாக இருக்கிறதில்லை?

வேறு வேறு குணாதிசயங்கள் கொண்ட மனிதர்கள் சங்கமிக்கிற ஒரு இடத்தைப் பற்றிய கதை. ஒரு வீட்டில் எங்ஙனம் சாத்தியம்?

"ஒரு குடும்பத்தில் ஏழெட்டுப் பேர் இருப்பதில்லையா?"

மேஜைக்குப் பின்புறமிருந்து புறப்படும் மேதாவிக் கேள்வி.

ராம்குமார், பல்லைக் கடித்துக் கொண்டான். கேவலம், கலைகளுடன் பரிச்சயமே இல்லாதவர்களுடன் சேர்ந்துதான் ஒரு கலைப் படைப்பைப் பிரசவிக்க வேண்டி இருக்கிறது. ஆனாலும் இது ஒரு சந்தர்ப்பம். நட்சத்திரம், சற்றுத் தொலைவிலிருந்தாவது கண்சிமிட்டத் தான் செய்கிறது.



"நல்லது. பட்ஜெட்தான் பிரச்னை என்றால் அதுவும் ஒரு பொருட்டல்ல. வெளிப்புறப் படப்பிடிப்புக்கான செலவு என்னுடையதாக இருக்கட்டும். எப்போது தொடங்கலாம்?"

"மிஸ்டர் ராம்குமார், யோசித்துச் சொல்லுங்கள். புறநகரில் நீங்கள் ஏற்பாடு செய்கிற பட்சத்தில் போக்குவரத்து, சாப்பாடு, டிபன், காப்பி, இட வாடகை, ஜெனரேட்டர் வாடகை..."

ராம்குமார்

பா. ராகவன்

அவனை உற்றுப் பார்த்தான். மளிகைக்கடைப் பையன் போல் வேக தொனியில் லிஸ்ட் படிக்கிற பிரேமலதா. சினிமாக்காரர்கள் எத்தனை தேவலை? நல்லது. நிலையம் அனுமதிக்கிற தொகைதான் என்ன?

"மூவாயிரத்தி ஐநூறு" என்றாள் பிரேமலதா.

கதை, திரைக்கதை, வசனம், நடிப்பு, போக்குவரத்து, சாப்பாடு, டிபன், காப்பி, ஜெனரேட்டர், வாடகை ரூ. மூவாயிரத்தி ஐநூறு.

"கேமரா யூனிட், அஸிஸ்டெண்ட்கள், லைட்மேன்கள், நடிகர்கள், எடுபிடிகள், சேர்த்து சுமார் நாற்பது பேர். அடுத்த ஞாயிறு ஷூட்டிங். எய்ட் டு எய்ட். பனிரெண்டு மணி நேரத்தில் முடித்து விட வேண்டும். இடத்துக்குச் சொல்லிவிட்டு தகவல் சொல்லுங்கள்."

ராம்குமார் தயங்கிக் கேட்டான் : "நீங்கள் வருவீர்களா?"

டீச்சரின் கேஷுவல் லீவிற்காகக் காத்திருக்கிற மாணவன்.

"ஏன் கேட்கிறீர்கள்?" புருவம் வளைந்து, புறப்படுகிற பிரேமலதாவின் கேள்வி.

"இல்லை, சும்மா..."

"டைரக்ஷனும் நீங்களே பண்ணிவிட உத்தேசமா? தாசில் பண்ண ஏக ஆசை!"

கடவுளே! இவள்தான் இயக்கப் போகிறாளா? இன்னும் எத்தனை கடல், மலைகள் தாண்டியாக வேண்டும்?

**வ**சிக்கிற காலனியின் செயலாளரிடம் அனுமதிக்காகப் பேசிய போது, யாரும் கண்ட இடத்தில் சிகரெட் பிடிக்கக் கூடாது என்பதில் தொடங்கி, காலனி நல நிதிக்காக ரூபா ஆயிரம் தந்து விட வேண்டும் என்பது வரை நூறு கண்டிஷன்கள் போட்டுவிட்டு, ஷூட்டிங் பார்க்க எனக்கொரு சேர் போட்டுவிடு என்று உபரியாகக் கேட்டுக் கொண்டார்.

காலையில் பொங்கல், வடை, இட்டலி, பிற்பகல் உணவுடன் ஆளுக்கு இலையில் ஒரு மைதா கேக், அதே கேக்கை நிறம் மாற்றி, மாலை டிபனுடன் மறுபடி ஒன்று, இரவு உணவு, மற்றபடி கேட்டவருக்கு, கேட்ட போதெல்லாம் காப்பி என்று உடுப்பி ஓட்டலில் ஆயிரத்தி இருநூறுக்கு ஏற்பாடு செய்து, நடிகர்களுக்கு ஞாபகப்படுத்தி, ஒரு வாரம் அலைந்து தூக்கம் இழந்து, ஆபீசில் திட்டு வாங்கி, லீவ் போட்டு வீட்டில் கண்ணாடி முன் நடித்துப் பார்த்து, மனைவியிடமும் விழுப்புரத்திலிருந்து இதன் பொருட்டே வந்திருக்கும் மாமனாரிடமும் நற்சான்றிதழ் வாங்கி, விடிகிற போது வெளிச்சம் ஏறி, டெக்னீஷியன்கள் வந்திருந்தார்கள்.

**ரா**ம்குமார் காத்திருந்தான். ஏன் இன்னும் பிரேமலதா வரவில்லை?

"அந்தம்மா எப்பவுமே இப்படித்தான் சார்! லேட்டா வந்து தாலி அறுக்கறதே பொழைப்பு!" சலித்துக் கொள்கிற கேமரா அஸிஸ்டெண்ட்.

"பாருங்களேன், மெதுவா ஆட்டிட்டு வந்து, இருக்கறவனை ஆயிரம் குத்தம் சொல்லும்!"

"**மி**ஸ்டர் ராம்குமார், இதைவிட தாரமாக உங்களுக்கு வேறு லொக்கேஷன் கிடைக்கவில்லையா? வேறு யாராவதாக இருந்திருந்தால், நான் ஷூட்டிங்கை கேன்ஸல் பண்ணி இருப்பேன். போனால் போகிறதென்று உங்களுக்காக...."

ராம்குமார், திரும்பித் தன் மாமனாரைப் பார்த்தான். பிரேமலதா வந்தவுடன் எய்திருக்கிற முதல் அம்பு. யாரோ ஒரு பெண்ணுக்கு முன்னால் தலை குனிந்து, நெளிகிற தன் மாப்பிள்ளையை அவர் எப்படிப் பார்க்கிறார்?

பாவங்கள் ஏதும் காட்டாமல், "முதல்ல அவாளுக்குக் காப்பி குடுங்கோ!"

மாமனாரே, உமக்கொரு நன்றி.

ஷூட்டிங் தொடங்கி, இரண்டு மூன்று ஷாட்டுகள் முடிய, பிரேமலதா வெடித்தாள்.

"இது என்ன மீன்கடை கும்பல்? எல்லாரையும் தள்ளிப் போகச் சொல்லு!"

எழுகிற முணுமுணுப்பில், ராம்குமார் சங்கடமானான். அத்தனை பேர் முகத்தையும் தினசரி பார்த்தாக வேண்டும். ஒரு நாள் கூத்தில் உறவுகள் முறியப் போகின்றனவா?

அவன் சங்கடம் பார்த்து, விலகிப் போகிற ராமபத்திரன், ஆராவமுதன், சண்முகநாதன்; பிளாக் மீனாட்சி மாமி, ஆர்வம் மேவிட்ட அக்கம்பக்கத்து சிறுவர் சிறுமிகள்....

"மாடு மாதிரி முழிக்காதே. கொஞ்சம் சாஃப்டா பாரு! கேமராவைப் பார்த்தே, தொலைச்சிடுவேன்!"

முப்பத்தாறு வயதில் நடிக்கிற ஆசைக்கு வடிகால் தேடியது தவறுதானாயிருக்கும். பனிரெண்டு மணி நேரம். ஷூட்டிங் முடிந்து பிரேமலதா காரில் ஏறிப் போய்விடப் போகிறாள். பிறகு மனைவி கேட்கிற கேள்விகள் இருக்கட்டும், வீசுகிற அனுதாபப் பார்வையை எப்படித் தாங்கிக் கொள்வது?

**இ**ரவு பத்து மணிக்கு மேல் எல்லாம் முடிந்து, பூசனிக்காயில் கற்பூரம் வைத்து சுற்றி, உடைத்துவிட்டு ஆளாளுக்குக் கிளம்பிப் போனார்கள். பாக்கிகளைக் கொடுத்து விட்டு ராம்குமார் சட்டைப் பையில் கைவிட்ட போது நாலணா மிச்சம் இருந்தது. வங்கியிலிருந்து எடுத்து வந்த பதினைந்தாயிரத்தில் மிச்சம்.

அடுத்த வாரம், அவனுக்கு அலுவலகத்தில் கழிந்தது. பார்க்கிறவர்களிடமெல்லாம் அனு

பவம் சொல்லி அலுக்க ஆரம்பித்து விட்டது. நாளை அவன் நாடகம் ஒளிபரப்பாகப் போகிறது. எல்லோரும் பார்த்து விடுங்கள். ஆரோக்கியமான விமர்சனங்கள் வரவேற்கப் படுகின்றன.

ஆரோக்கியமான விமர்சனம். பாராட்டைத் தவிர, அது வேறு என்னவாக இருக்க முடியும்?

மனைவியும் மாமனாரும் சக அடுக்குமாடி மனிதர்களும் மானேஜரும் பியூனும் டீக்கடைப் பையனும் அவனைப் புகழ்ந்து தள்ளியது ஒரு பொருட்டாக இல்லை. தெரிந்தவர்களின் பாராட்டை எப்படிக் கணக்கில் எடுத்துக் கொள்வது?

உணவு இடைவேளையில் பீட்டர் வந்தான். ஷூட்டிங்குக்கு வந்திருந்த கேமரா அஸிஸ்டெண்ட்.

"தூள் கிளப்பிட்டீங்க சார்! எங்க டைரக்டரே ஓஹோன்னு பாராட்டினார்."




ராம்குமாருக்கு சந்தோஷமாக இருந்தது. அரைமணி நாடகத்துக்குப் பதினைந்தாயிரம் செலவு. கொஞ்சம் அதிகமில்லையா? பாதியாவது தர மாட்டார்களா?

தயங்கிக் கேட்ட மனைவிக்கு என்ன பதில் சொல்வது என்று யோசித்துக் கொண்டிருந்தான். ஒரு சாமானிய நடுத்தர வர்க்கத்து வங்கி குமாஸ்தாவுக்கு இத்தகைய ஆசைகளெல்லாம் வரக் கூடாது போலிருக்கிறது. ஆனால், 'செய், செய்' என்று உள்ளுக்குள் குரல் கொடுக்கிற முகம் தெரியாத பிரகிருதிக்கு இதெல்லாம் எங்கே தெரிகிறது?

"அதான் பதிமூணாயிரம் அமவுண்ட் போட்டிருக்காங்களே சார்!"

எதிர்பாராமல் தகவல் தருகிற பீட்டர்.

இல்லை. மூவாயிரத்தி ஐந்நூறுதான் என்று பிரேமலதா சொல்லியிருக்கிறாள்....

"சரிதான். உங்க தலையிலும் கைவெச்சுட்டாங்களா? இன்னும் எத்தனை பேரை அந்தப் பொம்பளை ஏமாத்தப் போவுதோ...."

ஊழல் கிளை பரவாத இடம் இல்லைதான். ஆனால் ஒரு கலைஞனை அதிகபட்ச அவமானத்துக்கு உட்படுத்தியதோடு மட்டுமல்லாமல் இதென்ன நூதன மோசடி?

"வுடாதீங்க சார்! பத்தாயிரம் யார் வீட்டு சொத்து? சும்மா வந்து உக்காந்து நாட்டாமை பண்ணிட்டு, லவுட்டிக்கிட்டுப் போகப் பாக்குது சார் அந்தப் பொம்பளை!"

தன் நிலையை இழந்து கொண்டிருப்பதை ராம்குமார் உணர்ந்தான். மேனேஜரே, ஒன் அவர் பர்மிஷன். ஒரு நடை வெளியே போயிட்டு வந்துடறேன்.

நிலையத்தை அடைந்து, வரவேற்பில் கையெழுத்திட்டு விட்டு, தகவல் சொல்லி அனுப்பிக் காத்திருந்தான்.

"சார்..."

ராம்குமாரின் தலை நிமிர்ந்தது.

"சார், நீங்க தானே நேத்து நாடகத்துல நடிச்சது...."

"ஆமாம்!"

"சூப்பர் சார்! பின்னிட்டீங்க! ஒரு டீவி. நாடகத்துல இப்படி ஒரு நடிப்பைப் பார்த்ததில்லை சார்.... ஸ்கிரிப்டும் நீங்களேதான் இல்லை?"

"தேங்க்யூ. நீங்க..."

"ஆடிஷனுக்கு வந்திருக்கேன் சார். உங்க டிராமா பிரமாதம் சார்... நீங்க எங்கேயோ போகப் போறீங்க."

கடவுளே? இது என்ன? எனக்குள்ளே என்ன நிகழ்கிறது? என் நரம்புகள் ஏன் துடிக்கின்றன? கண்கள் ஏன் நிரம்புகின்றன? உதடு ஏன் துடிக்கிறது?

ராம்குமார், அவன் கரங்களைப் பற்றிக் கொண்டான். ஒரு கலைஞனுக்குப் பாராட்டு எத்தகைய பலம் தரக்கூடும் என்பதை இலேசில் சொல்லிவிட முடியாது. வார்த்தைகள் அற்ற மௌனத்தின் மூலம் அவன் தன் நன்றியைச் சொல்லிக் கொண்டிருந்தான்.

"சார் அம்மா கூப்பிடறாங்க..." உள்ளே அழைக்கிற வெண்ணுடைப் பணியாளன்.

"வரேன்...."

"எஸ், மிஸ்டர் ராம்குமார்...."

டேபிளுக்குப் பின்புறமிருந்து கம்பீரமாக வெளிப்படும் பிரேமலதாவின் குரல்... அதே மாறாத அலட்சியம்.

"உங்கள் செக் மூவாயிரத்தி ஐந்நூறு இன்னும் ஒரு வாரத்தில் வந்து சேரும். வேறு ஏதாவது விஷயம்...?"

அவன், அவளை ஒரு கணம் உற்றுப் பார்த்தான். பின், இரண்டு கைகளையும் சேர்த்துக் கூப்பி, "நன்றி மேடம்... எல்லாத்துக்கும்" என்றான்.



"ஆயிரம் காலத்துப் பயிராக
ஆண்டாண்டு காலமாக வளரும்
அன்பை வெளிப்படுத்தும் பாசப்பிணைப்பு...
அதை உறுதிப்படுத்தும் ஒரு நல்ல பரிசு—
தன விருக்ஷா."

# இன்றைக்கு வருமானம்

உங்கள் டெபாசிட்
ரூ.15,000/- மட்டுமே....

அதன் மூலம் உங்களுக்கு கிடைப்பதோ -
**21% வட்டி**



ரூ.**6,000/-** மதிப்புள்ள
தேக்குப் பண்ணை



**5** ஆண்டுகளுக்குப் பிறகு
உங்கள் டெபாசிட் ரூ.**15,000/-**



**20** ஆண்டுகளுக்குப் பிறகு
தேக்குப் பண்ணை வருமானமாக
ரூ. **5** லட்சம்

ஆக, மொத்த வருமானம்
**ரூ.5,36,750/-**

யார் தருவார் இந்த அருமையான வாய்ப்பு?

**அனுபவ் மட்டுமே!**

## அனுபவ்
## தன
## விருக்ஷா

### பிக்சட் டெபாசிட் திட்டம்

அனுபவ் பல துறைகளில் ஈடுபட்டு சிறப்புடன் வளர்ந்து வரும் பல கோடி மதிப்புள்ள ஒரு குரூப். இந்தியா முழுவதும் 70 அலுவலகங்களில் பணி புரியும் 1,800 நிபுணர்களுடன், 70,000க்கு மேற்பட்ட வாடிக்கையாளர்களின் நல்ல நம்பிக்கையைப் பெற்றுள்ளது இந்த குரூப்.

நிதி நிர்வாகம் மற்றும் தேக்கு மர வளர்ச்சி ஆகியவற்றில் பெற்ற தேர்ச்சியையும், அனுபவத்தையும் இணைத்து அனுபவ் அளிக்கும் தன விருக்ஷா டெபாசிட் திட்டத்தில் உங்கள் டெபாசிட் தொகைக்கு கிடைக்கும் பயன்களை இந்த அட்டவணையில் காணலாம்.



# 27

## சோழ நாட்டு சிம்மம்

அரசியல் பிரமுகர்களுக்கென்றே பிரத்யேகமாக அமைக்கப்பட்டிருந்தது அந்தச் சிறைச்சாலை. அதில் அடைக்கப்பட்டிருந்த காடவ மன்னன் சாளரத்தின் வழியே பார்த்து, வந்து கொண்டிருப்பவர் துறவியார்தான் என்பதை உறுதி செய்து கொண்டான். அவன் மூர்க்கம் கணத்துக்குக் கணம் உயர்ந்து கொண்டேயிருந்தது. தனது இந்த நிலைக்குக் காரணமான துறவியாரை ஒழித்துக்கட்டி விடுவது, பிறகு சோழ மன்னனே வந்து என்ன தண்டனை அளித்தாலும் கவலையேதுமில்லையென்ற தீர்மானத்திற்கு வந்துவிட்டான். மறைத்து வைத்திருந்த குத்துவாளைக் கரத்திலெடுத்துச் சாதகமாக வைத்துக் கொண்டு, துறவியார் தனித்து உள்ளே நுழையும் தருணத்தை எதிர்பார்த்துக் காத்திருந்தான்.

துறவியாரின் திடமான காலடியோசையும் அவர் காவல் வீரர்களிடம் ஏதோ விசாரித்து விட்டு அறையை நோக்கி மீண்டும் நடந்து வருவதும் காடவ மன்னனுக்குக் கேட்டது. தலையைக் குனிந்தபடியே அமர்ந்திருந்தவன், இலேசாக விழிகளை உயர்த்தி, அவர் வாயிலில் இரு கணங்கள் நிற்பதையும் பின்பு தன்னை நோக்கி வருவதையும் கண்டு கொண்டான். திடீரென்று கரத்தில் பிடித்த குத்துவாளுடன் புயலாக எழுந்தவன், வேங்கையைப் போல் அவர் மீது பாய்ந்தான்.

அவன் திடீரென்று எழுந்ததையும், கரத்தில் குத்துவாளொன்று மின்னியதையும், கண் கொத்திப் பாம்பாக கவனித்துக் கொண்டிருந்த வாயிற்காவலர்கள், வாளை உருவிக் கொண்டு உடனே பாய்ந்தனர். துறவியார், கோப்பெருஞ்சிங்கனிருந்த சிறைச்சாலைக்குள் நுழைந்ததைக் கவனித்துவிட்டு விஜயனும் பின்னால் ஓடி வந்தான். ஆனால் அடுத்தகணமே காவலர்களும், விஜயனும் திகைத்து அப்படியே நிற்கும்படியான நிகழ்ச்சியொன்று அவர்கள் கண்ணெதிரில் நடந்தது.

கோப்பெருஞ்சிங்கன் குத்துவாளுடன் தன்னை நோக்கிப் பாய்வதைக் கவனித்தும் அசையாமல் ஆஜானுபாகுவாக நின்ற துறவியாரின் இடதுகரம் உயர்ந்தது. வா்ன்



# இந்திர கவசம்

**விஷ்வக்சேனன்**

[illegible] பறந்தது.
வலதுகரத்தை அவன் தோள்களில் கொடுத்து வளைத்து,தேர்ந்த மல்லனைப்போல் ஒருமுறை சுழன்று திரும்பினார் துறவியார். குத்துவாள் பறக்க, மொத்தமாகத் தூக்கி எறியப்பட்ட தேர்ப்பெருஞ்சிங்கன், பறந்து, சிறைச்சுவரில் மோதி விழுந்தான். அசையக்கூட இயலாமல் துறவியாரை வெறித்த அவன் பார்வையில் பிரமை தட்டியிருந்தது.

"அவனை எழுப்பி இருக்கையில் அமர்த்துங்கள்"- துறவியாரின் குரலில் ஆணையிடும் தொனி பூரணமாக ஒலித்து, பிரமிப்பில் உறைந்துவிட்ட காவலர்களையும் விஜயனையும் ஓடிவர வைத்தது. காடவமன்னனை எழுப்பிச் சரியாக அமர்த்திய வீரர்களை விலகுமாறு சைகை செய்த துறவியார், நிதானமாக அவனை அணுகினார். மீண்டும் அவர் குரல் ஒலித்தது: "ஆத்திரம் அறிவுக்குச் சத்ரு வீரமல்ல!" என்று.

**சீ**ரென்று சாட்டையால் அடிக்கப்பட்டவன்போல் நிமிர்ந்தான் காடவ மன்னன். அவன் சிற்றரசை அமைக்கும் முன் சிறந்த மல்லனாக விளங்கியபோதிருந்த அவனது சொந்தப் பெயர் வீரமல்லன் என்பது. சர்வ சாதாரணமாகத் தன்னைத் தூக்கி விட்டு, தனது பூர்வீகப் பெயரையும் மௌனமாக உச்சரித்த துறவியாரை நோக்கிய காடவ மன்னனின் முகத்தில் விவரிக்க இயலாத உணர்ச்சிகள் மாறி மாறித் தோன்றின.

அடுத்து அவன் சொற்களும் தடுமாறிய படி வந்தன. "நீர் உண்மையில் யாரென்று தெரியவில்லை. ஆனால் இந்தக் குரலில் ஆணையிடும் தொனியை எங்கோ கேட்டிருக்கிறேன். வாளுடன் வருபவனை இப்படித் தூக்கி எறியும் முறையும் ஒரு சிலருக்கே தெரியும். நிச்சயம் நீர் துறவியல்ல. நீர் போட்டிருக்கும் இந்தத் துறவிக்கோலத்தை மதித்துக் கேட்கிறேன். சிறைப்பட்டவன் ஒரு சிற்றரசனாக இருந்தால் தனி மாளிகையில் காவலில் வைப் பதுதானே சோழர் வழக்கம்? என்னை இப்படி சிறைச்சாலையில் அடைத்திருப்பது தர்மமா? நீதியா? [illegible] துறவியே சொல்"- இரைந்து கேட்டவன் குரலில் இன்னும் அடங்காத ஆத்திரம் ஒலித்தது.

துறவியாரின் முகம் மாறியது. என்றும் உணர்ச்சிகளை அதிகம் வெளிக்காட்டாத அவர் சிவந்த முகம் இன்னமும் சிவந்து, பெருவிழிகளில் கனல் பறந்தது. "வீரமல்லா! தர்மத்தையும் நீதியையும் பற்றிப் பேச உனக்குத் தகுதியில்லை. சோழ ராஜராஜர் உனக்கு என்ன குறை வைத்தார்? வான்நிலை கண்ட பெருமான் என்று பட்டமளித்து, அரசவையில் தக்க பதவியளிக்கவில்லையா? தன் சகோதரியை உனக்கு மணமுடித்துத் தர வில்லையா? நீ தனிப்பட அரசாள விரும்பியபோதும் சம்மதிக்கவில்லையா? வீரனுக்கு வெற்றியும் தோல்வியும் சகஜம். அவர் பாண்டியர் போரில் தோற்றுவந்தபோது, உறுதுணையாக இருக்க



# பிரம்மாண்டமான அதிநவீன தங்க நகை



# ஏற்றுமதி உற்பத்தி தொழிற்சாலை

# திட்டத்திற்கான டெபாசிட்டுகள்



# சேகரிப்பு விழா

# 30% + 7% + 2 கிராம்

வட்டி ஊக்கத்தொகை

தங்க நாணயம் இலவசம்

மற்றும் கீழ்கண்ட சிறப்புப் பரிசுகள்

| டெபாசிட் | ரொக்க பரிசுகள் |
|---|---|
| ரூ. 10 ஆயிரம் | ரூ. 150 |
| ரூ. 25 ஆயிரம் | ரூ. 400 |
| ரூ. 50 ஆயிரம் | ரூ. 1000 |
| ரூ. 1 லட்சம் | ரூ. 2250 |
| ரூ. 2 லட்சம் | ரூ. 4800 |
| ரூ. 3 லட்சம் | ரூ. 7500 |
| ரூ. 5 லட்சம் | ரூ. 13000 |



ரூ.10,000 முதலீடு செய்யும் முதல் 1000 நபர்களுக்கு ஒரு வெள்ளி விளக்கு இலவசம்.

தொழிற்சாலை

திறப்பு விழா 18.09.96

உற்பத்தி தொழிற்சாலை இடம்:
எண் 162 மௌண்ட் பூந்தமல்லி ரோடு,
போரூர், சென்னை-116.

முதல் பரிசு
(ரூ.6 லட்சம் மதிப்புள்ள FLAT)



ஒரு நபருக்கு

இம்பீரியல் குரூப் நிறுவனங்களில்
முதலீடு செய்து போட்டியில் கலந்து கொண்டு
ரூ. 20 லட்சம்
மதிப்புள்ள
1001 பரிசுகளை
வெல்வீர்!

இரண்டாம் பரிசு
(மாருதி-800 கார் Non A/c)



இரண்டு நபர்களுக்கு

மற்றும் பல பரிசுகள்

டெபாசிட் பெறும் இடங்கள்



# இம்பீரியல் கோல்டு ஹவுஸ்

(இம்பீரியல் குரூப்பின் ஓர் அங்கம்)

நெ. 5, திருமலைப் பிள்ளை ரோடு, தி. நகர்,
(வள்ளுவர் கோட்டம் அருகில்), சென்னை - 600 017.
போன்: 823 51 51 / 823 51 61 ஃபேக்ஸ்: 823 51 71

வேலை நேரம் : காலை 10 மணி முதல் 1 மணி வரை. மாலை 2 மணி முதல் 8 மணி வரை. ஞாயிறு விடுமுறை.

இம்பீரியல் கோல்டு ஹவுஸ் மத்திய அலுவலகம் : "கட்டாலா டவர்ஸ்",
எண் 19, அவின்யூ ரோடு, நுங்கம்பாக்கம், (ஓட்டல் கணபத் அருகில்),
சென்னை-34. போன் : 8274159. ஃபேக்ஸ் : 8274814

நகைத் தொழிற்சாலை : இம்பீரியல் கோல்டு ஹவுஸ்,
எண் 162, மௌண்ட் பூந்தமல்லி ரோடு, (ரெயின்போ இங்க் பேக்டரி அருகில்),
போரூர், சென்னை-116. போன் : 4829474

நம்பிக்கையின் சிகரம்



1057/96

## அருள்வாக்கு

**தன் வேலையை இன்னொருத்தனிடம் விட்டு விட்டு, தான் 'ஊராளுக்குத் தொண்டு செய்கிறேன்' என்று போனால் அது பரிஹாஸந்தான், fraud (மோசடி)தான். தாயார், தகப்பனார், ஸஹோதரர், பத்னி, புத்ரர் இருந்தால் அவர்களுக்குச் செய்ய வேண்டிய ட்யூட்டிகளைச் செய்யாமல் லோகத்துக்கு உபகாரம் செய்கிறேன் என்றால் அது 'ஹிபாக்ரிஸி' (போலி வேஷம்)தான். இப்படியெல்லாம் பண்ணிவிட்டு மநுஷ்யாள் எடுத்துக் காட்டினால் கோபம் வருகிறது, எரிச்சல் வருகிறது என்றால் பரோபகாரத்தால் இவனுக்கு எந்த அபிவிருத்தியும் ஏற்படவில்லை என்றுதான் அர்த்தம். 'எல்லாரிடமும் அன்பாயிருக்கணும், மதுரமாய்ப் பழகணும்' என்பதுதான் தொண்டு செய்கிறவனுக்கு லக்ஷணம். பொதுத்தொண்டு என்பதற்காகவே வீட்டு மநுஷ்யர்களிடம் அன்பு போய், எரிந்து விழுந்து கொண்டிருக்கிறானென்றால் இவன் தொண்டு செய்து என்ன புண்யம்? இவனுக்கு என்ன சித்த சுத்தி**

வேண்டிய நீயே அவரை சிறை செய்தாய். எந்த மாளிகையில் அவரைச் சிறைவைத்தாய்? நேற்று முளைத்த சிற்றரசனான உன்னைச் சிறையில் அடைத்ததற்கே இத்தனை கொதிப்பிருந்தால் வேங்கி முதல் குமரி வரை ஒரே குடையில் ஆண்ட சோழ மரபில் வந்தவரை சிறையில் அடைத்ததற்கு அவர் எத்தனை வருந்தியிருப்பார்? உன்னுடைய அந்தச் செயல் தான் தமிழகத்தில் பேரரசர் அடியெடுத்து வைக்கக் காரணமென்பதை என்றாவது எண்ணினாயா நீ? இனியொரு முறை சோழர் நீதியையும், தர்மத்தையும் பற்றிப் பேசினால் உன்னைச் சுருட்டியப் பிண்டமாக அடித்து விடுவேன், எச்சரிக்கை!'' இரும்பாக ஒலித்த அந்தக் குரலில் கோப்பெருஞ்சிங்கன் சப்த நாடிகளும் ஒடுங்கிப் போயிருந்தான். அவன் உடலும் இலேசாக நடுங்கியது. அவர் வார்த்தைகளில் தெறித்த உண்மை அவனை நெருப்பாகச் சுட்டது.

துறவியாரின் குரல் மீண்டும் ஒலித்தது. "இப்பொழுது சொல் வீரமல்லா! கொங்கு நாட்டிலிருந்து கொள்ளையடித்த பொற்குவியல் எங்கிருக்கிறது? காடவராயன் எங்கே?"

தடுமாறியபடி பதிலளித்தான் காடவ மன்னன். "துறவியாரே, நான் சற்று நிதானத்திற்கு வர அவகாசமளியுங்கள். இன்னும் இரு தினங்களில் அனைத்தையும் கூறி விடுகிறேன்."

சிம்மத்தின் கர்ஜனை போல் ஓர் ஒலி எழுந்தது, துறவியாரிடமிருந்து. ஒருகணம் அவனை வெறித்தவர் திரும்பி வெளியே நடந்தார். அந்த கர்ஜனையில், தள்ளி நின்ற விஜயனின் உடல் சிலிர்த்தது.

சிறைச்சாலையில் நிகழ்ந்தவற்றை விஜயன் வந்து விளக்கியதும் வியந்த ஆதித்யன், துறவியாரைக் காண விரைந்தான். அதே மேன் மாடத்து அறையில் சாளரத்தருகேயிருந்த இருக்கையில் அமர்ந்து, சாவதானமாக ஏதோ ஓலைகளில் எழுதிக் கொண்டிருந்தார் துறவியார். சாந்தம் தவழும் அந்த முகத்தையும், அவர் நிதானத்தையும் கண்ட ஆதித்யன், 'சற்று முன்பு காடவ மன்னனை ஒரு மல்லனைப் போல் தூக்கியெறிந்ததாக இவரையா விஜயன் குறிப்பிட்டான்?' என்று உள்ளுக்குள் வியந்தான்.

"துறவியாரே, சிறைச்சாலையில்..." என்று தொடங்கியபடியே உள்ளே நுழைந்த ஆதித்யனை, தலையசைத்து வரவேற்றவர், அது ஒன்றும் அத்தனை முக்கியமானதல்ல என்பதைப் போல கரத்தை அசைத்துவிட்டு. "அது கிடக்கட்டும் ஆதித்யா. நீ காஞ்சிக்குச் செல்ல ஏற்பாடுகள் செய்துவிட்டேன். கண்ட கோபாலனுக்கும் காகதீய மன்னனுக்கும் சோழ தூதர் வருவதாகச் செய்தியனுப்பி விட்டேன்'' என்றார்.

''நாளைக்காலையிலே புறப்படுகிறேன் துறவியாரே, அதற்கு முன்பாக தங்களிடம் ஒன்று கூற வேண்டும்...'' என்றான் ஆதித்யன்.

"சொல் ஆதித்யா."

''பாண்டியருக்குப் பரிசாகத் தாங்கள் இந்திரதனுசை அளித்தீர்கள்.''

"ஆம்"

"உண்மையில் அது வரகுண பாண்டியர் காலத்தில் சோழ மன்னருக்குச் சீதனமாக அளிக்கப்பட்டது"

"ஆம். உண்மை"

"தன் முன்னோரால் மகளின் மணப் பரிசாக சோழர்களுக்கு அளிக்கப்பட்டதை, மீண்டும் பெற்றுக் கொள்ள பாண்டிய மன்னர் ஜடாவர்ம சுந்தரபாண்டியர் விரும்பவில்லை. தலைமுறைகள் மாறலாம். தர்மங்கள் மாறாது என்று கூறச் சொன்னார் மன்னர்'' என்றான் ஆதித்யன்.

துறவியார் சற்று நேரம் மௌனமாயிருந்தார். சற்றுக் கழித்து "ஆதித்யா, காடவனிடத்தில் குவிந்து கிடக்கும் பொற்குவியலை என்ன செய்வதாக உத்தேசம்?'' என்றார்.

"அவை போரிட்டுப் பெற்றவை. எனவே அவை மூன்று பகுதிகளாகப் பிரிக்கப்பட்டு திருவரங்கத்திற்கும், தில்லைக்கும் திருப்பணிகள் செய்யவும் மூன்றாவது பகுதி கொங்கு மக்களின் நலனுக்காகவும் செலவிடப்படும்'' என்ற ஆதித்யன், தனது அறைக்குச் சென்று நீண்ட பேழையொன்றுடன் திரும்பினான்.

"துறவியாரே. தாங்கள் அளித்த இந்திர



ஏற்பட முடியும்? குளிக்கப் போய்ச் சேற்றைப் பூசிக் கொள்கிற மாதிரி பண்ணிக் கொள்ளக் கூடாது.

தன் லிமிடேஷனை எவனும் எப்போதும் உணர வேண்டும். மநுஷ்யராய்ப் பிறந்து விட்டோம். அதனால் நாம் பல திநுஸில் கட்டுப்பட்டுத்தான் கிடக்கிறோம். ஆசைகள், ஆஸ்திகள் பெரிசாய் இருக்கலாம். அவை நல்லதாகவும் இருக்கலாம். லோகத்துக்கு நல்லது பண்ணனும் என்றே ஆர்வமிருந்தாலும் நமக்கும், நம் குடும்பத்துக்கும் செய்தேயாக வேண்டும் என்ற நிர்பந்தம் இருப்பதை உணர்ந்து இந்த ட்யூட்டிக்கு ஹானியில்லாமல்தான் லோக ஸேவை செய்ய வேண்டும்.

- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்.

தனுசின் பொன்னோலைகள் இதிலிருக்கின்றன. அவற்றை உரிய இடத்திலேயே வைத்து விடுங்கள்" என்றான்.

துறவியாரின் முகத்தில் விஷமம் படர்ந்தது. "உண்மை ஆதித்யா. உண்மை. கொங்கு நாட்டின் நிலை உயர வேண்டியது அவசியம் தான். மன்னன் அவந்தன் இப்போது சோழர்களுக்கு மட்டுமின்றி பாண்டியருக்கும் நெருங்கியவனாகிவிட்டானல்லவா?" என்றவர் பலமாக நகைத்தார். நகைத்து முடித்தவர், "சரி, ஆதித்யா, நாளை உதயத்தில் நீ காஞ்சிக்குப் புறப்பட சித்தமாக வேண்டும். விஜயனும் உன்னுடன் வருவான்" என்றார். காஞ்சியின் நிலை பற்றி விளக்கவும் தொடங்கினார்.

“**க**ல்லார் மதில் சூழ் கச்சி நகர்" என்று திருமங்கை மன்னன் பாடிய காஞ்சியின் உயர்ந்து நீண்ட மதில்கள், ஆதித்யன் முன்பாக எழுந்தன. கண்டகோபாலன் கோட்டைக்கு வெளியே இழுக்காவிட்டால், காஞ்சியை வெல்வது கடினம் என்று துறவியார் கூறியதன் பொருள் ஆதித்யனுக்குப் புரிந்தது.

சோழ தூதர் வருகையை அறிவித்த பேரிகைகளைத் தொடர்ந்து, கோட்டைத் தலைவன் சிறுபடைப் பிரிவுடன் வந்து, ஆதித்யனை எதிர்கொண்டு வரவேற்றான். உயர்ந்து எழுந்த மாளிகைகளையும், கம்பீரமாகத் தெரிந்த கோபுரங்களையும் கண்டு வியந்தபடியே வந்த ஆதித்யன், அரண்மனை வாயிலிலேயே வரவேற்ற விஜய கண்ட கோபாலன், தூதராக வருபவர் வழக்கமாக வரும் பேரமைச்சரின் உறவினரல்ல என்பதையும் விளையாட்டுப் பிள்ளை போன்ற முகத்துடன் வாலிபன் ஒருவன் வருவதையும் கண்டு ஒருகணம் வியப்பைக் காட்டினான். பின்னர் அபரிதமான உபசரிப்புடன் வரவேற்றான்.

சோழ தூதருக்கு அளிக்கப்பட்ட அறையின் அலங்காரங்களும் அபரிமிதமாகவே தெரிந்தன. பணிப்பெண்களாக வந்த யவன மங்கையர் அணிந்திருந்த ஆடைகள் ஆதித்யனின் கண்களைக் கூச வைத்தன. ஏவலுக்கும் காவலுக்கும் வீரர்கள் காத்து நின்றனர். அறையின் வாயில் வரை வந்த கண்டகோபாலன், ஆதித்யனை ஓய்வெடுத்துக் கொள்ளும்படியும் மாலையில் சந்திப்பதாகவும் கூறிச் சென்றான். ஆதித்யனின் கூரிய அறிவு அந்த அதீத உபசரிப்பில் அபாயம் கலந்திருப்பதை உணர்த்தியது. மன்னன் அகன்றதும், விஜயனை அழைத்தவன், "விஜயா, இந்த உபசரிப்பும், அதிகப்படியான மரியாதையும் சந்தேகமளிக்கிறது" என்றான் ரகசியக் குரலில்.

பதிலுக்கு நகைத்த விஜயன், "இளவரசே இதற்கு முன் தூதராக வந்து கொண்டிருந்தவர் அமைச்சரின் உறவினர். இங்கு நடப்பவற்றையும், ஆட்சியின் குறைகளையும், சோழ மன்னரிடம் தெரிவிக்காதிருக்க இத்தகைய உபசரிப்பையும் பரிசுகளையும் பெறுவது அவர் வழக்கம். தங்களையும் இணங்க வைக்க கண்டகோபாலன் முயற்சி செய்கிறான்" என்றான்.

**மா**லைப்பொழுது வந்தபின்பு மன்னன் அழைப்பின்பேரில் அவனைக் காணச் சென்ற ஆதித்யன், அந்த அதீத உபசரிப்பின் பின்னால் எத்தனை பெரிய அபாயம் மறைந்திருக்கிறது என்பதை மேலும் தெளிவாகப் புரிந்து கொண்டான். வெகு இனிமையாகவும் சகஜமாகவும் உரையாடத் தொடங்கினான் கண்ட கோபாலன். போகப் போக அவன் நுழைந்தது சரியென்பது புரிந்தது ஆதித்யனுக்கு.

மன்னன் அழைத்ததைத் தொடர்ந்து கோட்டைத் தலைவனுடன் அத்தாணி மண்டபத்தில் நுழைந்தான் ஆதித்யன். மண்டபத்தின் தூண்களும் அவற்றில் நிறைந்து கிடந்த சிற்பங்களும், ஊசலாடிய தோரணங்களும் மேலே தெரிந்த சித்திரங்களும், யவனர் சரவிளக்குகளும் அந்த மண்டபத்தை தேவலோகமாகவே மாற்றியிருந்தன. அந்த பிரமிப்பினூடே ராஜராஜனும் ராஜேந்திரனும் குலோத்துங்கனும் அமர்ந்த ரத்னாசனத்தில் கண்டகோபாலன் அமர்ந்திருப்பதைக் கண்டபோது, சோழர்களின் இழப்பு எத்தகையது என்ற வருத்தமே மேலோங்கியது.

அந்தப் பெரு மன்னர்கள் காலத்தில் அந்த மண்டபத்தில் இல்லாத ஒன்றும் அப்பொழுது அங்கிருந்தது. மன்னனுக்கும், தூதருக்குமிடையே பல வண்ணங்களில் மது



''கேடி கேனப்பன் போதையில் இருந்தப்ப மாமூல் கேக்கப் போனது ஒரு வகையில் நல்லதாப் போச்சு...?''

''ஏன்...?''

''நான் ரெண்டு ஆளா அவன் கண்ணுக்குத் தெரிஞ்சதால டபுள் மாமூல் கொடுத்திட்டான்...!''

— ஜி. செல்லத்துரை

வகைகளும், அலங்கார மதுக்குப்பிகளுமிருந்தன. அந்த அலங்காரங்கள் போதாதென்று அவற்றைப் பரிமாற இரண்டொரு யவன மங்கையரும் தயாராக நின்றனர். ஆதித்யன் முகத்தில் கடுமை படர்ந்தது. மன்னனை நோக்கி லேசாகத் தலை தாழ்த்தி நிமிர்ந்தவன் குரலிலும் கடுமை ஒலித்தது. "மன்னா, முதலில் இந்த மதுவகைகளையும் இதோ நிற்பவர்களையும் அப்புறப் படுத்துங்கள்!" என்றான்.

கண்டகோபாலனின் அடர்ந்த புருவங்கள் மேலேறின. 'இவை அனைத்தும் மிக உயர்ந்த வகையைச் சேர்ந்தவை தூதரே'' என்றான் அவன்.

"எந்த வகையானாலும் சரி, நான் மது அருந்தும் வழக்கமில்லை" ஆதித்யன் குரல் திடமாக ஒலித்தது.

'இந்த மங்கையரில் தங்களுக்கு....''

"தேவையில்லை. வெளியேற்றி விடுங்கள்" என்ற ஆதித்யனைப் பார்த்து பலமாக நகைத்தான் கண்டகோபாலன்.

"மதுவும் மங்கையும் தேவையில்லையென்றால் மனிதன் பிறக்கவே தேவையில்லை தூதரே!" என்றான் நகைப்பினூடே.

திடமாக ஒலித்த ஆதித்யனின் குரல் கண்டகோபாலனின் நகைப்பைப் பாதியில் வெட்டியது. "மன்னா, அது உங்கள் எண்ணமாக இருக்கலாம். ஆனால் தமிழன் சித்தாந்தமே வேறு. இவை இரண்டுமே அறிவை மயக்குபவை. இடம் கொடுத்தால் மடம் பிடுங்குபவை. இவற்றை அணுகக் கால நேரமும் முறையும் அளவும் உண்டு. அதிலும் அயல் தேசத்தில் இவற்றால் அபாயம்தான் விளையும். மேலும் தங்களிடம் தனித்துப் பேசுவதற்கு மன்னரும் உத்தரவிட்டிருக்கிறார்."

பார்வைக்கு விளையாட்டுப் பிள்ளையாகத் தெரியும் சோழ தூதரின் மனம் உண்மையில் மிக உறுதியானது என்பது புரிந்தது கண்டகோபாலனுக்கு. "இந்த இள வயதில் சோழ தூதர் காட்டும் மனஉறுதி மகிழ்ச்சியளிக்கிறது!"

அதற்கும் பதில் வந்தது சோழ தூதரிடமிருந்து. "நான் பிறந்த மண்ணின் தன்மை அது மன்னா. மண், பண்பாட்டை அளிக்கிறது. பண்பு உறுதியையும் அறிவையும் அளிக்கிறது. அறிவு மனிதனை உயர்த்துகிறது. இதில் வேறு விஷயங்கள் குறுக்கிட அனுமதித்ததால்தான் தமிழனின் நிலை தற்போது மாறுபட்டு விட்டது. காஞ்சியில் மன்னனாகத் தாங்கள் அமர்ந்திருக்கவும் தமிழன் தூது வரவும் நேரிட்டிருக்கிறது."

கண்டகோபாலனின் சிவந்த பெரு விழிகள் ஆதித்யன்மீது நிலை குத்தி நின்றன. அவன் பெருமீசையும் ஒருமுறை பயங்கரமாக அசைந்தது. அடுத்தகணம் அவன் முகத்தில் பலத்த சிந்தனையும் படர்ந்தது.

வந்திருப்பவன் சாமானியப் பேர்வழியல்ல என்பது புரிந்தது கண்டகோபாலனுக்கு. காகதீயரின் பிரதிநிதியாகக் காஞ்சியை ஆள்வதை விடுத்து, சுதந்திர மன்னனாக வேண்டுமென்ற அவனது எண்ணத்தை நிறைவேற்றிக் கொள்ள ஆதித்யனை பயன்படுத்திக் கொள்வதென்றும் இத்தகைய துணிவும் தெளிந்த அறிவும் உடைய வாலிபன் கிடைப்பது அரிது என்றும் தீர்மானித்த கண்டகோபாலன், தன் வலையை பலமாக வீச ஆரம்பித்தான். அவனுக்குப் பக்கபலமாக, எங்கிருந்தோ ஜில் ஜில் லென்ற சதங்கைகளின் ஒலி அந்த மண்டபத்தை நோக்கி வந்து கொண்டிருந்தது.

பலத்த சிந்தனையைக் காட்டிய கண்டகோபாலனின் முகத்தில் அந்த சதங்கைகளின் ஒலி, ஒரு மலர்ச்சியையும் படர விட்டது. களத்திலும் ஆட்சி நடத்துவதிலும் எந்த முடிவையும் கண நேரத்தில் எடுப்பவனென்றும் அதை நிறைவேற்ற பெரும் தந்திரத்தையும் மூர்க்கத்தனத்தையும் கையாள்பவனென்றும் பெயரெடுத்திருந்த கண்டகோபாலனின் புத்தியில், ஏதோ பனிச்சிட்டதற்கான அறிகுறி தென்பட்டது.

அடுத்து உதிர்ந்த அவன் வார்த்தைகளால் கண்டகோபாலனின் எண்ணத்தையும், தொடர்ந்து சதங்கைகளின் ஒலி கட்டியம் கூற, மண்டபத்தில் நுழைந்த அழகிய பெண்ணையும் கண்ட ஆதித்யன், தான் எண்ணி வந்ததை விடப் பெரும் அபாயம் தன்னைச் சூழ்ந்து கொள்வதை உணர்ந்தான்.

(தொடரும்)

பாதன் அச்சகத்தில் அச்சிட்டவர் : வி. முரளி, பாதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர் : கி. ராஜேந்திரன்.
ஆசிரியர் : சீதா ரவி.
முகவரி : 47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காட்டுதாங்கல், சென்னை - 600 097. தொலைபேசி : ஆசிரியர் குழு அலுவலகம் : 2345624; சர்க்குலேஷன் மானேஜர் : 2345623; சந்தா, விளம்பரம் : 2345622; மானேஜிங் டைரக்டர் : 2345621.
ஆண்டுச் சந்தா - உள்நாடு : ரூ. 156/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 400/-; விமானத் தபால் ரூ. 1050/-.
ஆறு மாதச் சந்தா - உள்நாடு : ரூ. 78/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 200/-; விமானத் தபால் : ரூ. 525/-.

REGISTERED NO. TN/MS(S) M 4392
Registered as Newspaper in Srilanka



# மனநிம்மதியான முதலீடு – பரிபூரண பாதுகாப்பு (TM)

*உங்கள் டெபாசிட்டுகள் T. நகரில் உள்ள பிரதான அசையா சொத்தால் (டோர் நம்பர். 27 சி, பிளாக் 5488/1, ராமேஸ்வரம் ரோடு) பாதுகாக்கப்படுகிறது.*

படித்த அனுபவம் மிக்க நிபுணர்களின் சீரிய நிர்வாகம் | கௌரவமான வருமானம் | மரியாதையான சேவை

## பென்ஷனர்/பொதுஜன பாதுகாப்புத் திட்டம் (TM)

1 வருடம் : 24% + 4% இன்சென்டிவ் P.A.
2 வருடம் : 24% + 6% இன்சென்டிவ் P.A.
3 வருடம் : 30% + 2% இன்சென்டிவ் P.A.
5 வருடம் : 36% P.A

## வாடிக்கையாளர் வசதித் திட்டம் (TM)

| | |
|---|---|
| எப்போது வேண்டுமானாலும் பணம் எடுத்துக் கொள்ளலாம் புதுப்பிப்பதற்காக வர வேண்டிய அவசியம் இல்லை | 30 தினம் 18%<br>45 தினம் 19%<br>60 தினம் 20%<br>90 தினம் 21% |

**முன்கூட்டிய வருவாய்த் திட்டம்:** (TM) முழு வட்டியும் டெபாசிட் செய்யும் தேதியன்றே தரப்படும். 1 வருடம்: 20%, 3 வருடம் : 55%.

**மாதப் பென்ஷன் திட்டம்;** (TM) டெபாசிட் ரூ. 10,000. காலம்: 5வருடம்; மாத வட்டி ரூ. 320

## சுமங்கலி கல்யாணத் திட்டம் (TM) மேக்சிமம் இன்கம் ஸ்கீம் (TM)

| டெபாசிட் | காலம் | முதிர்வுத் தொகை |
|---|---|---|
| ரூ. 5,000 | 3 வருடம் | ரூ. 12,000 |
| ரூ. 10,000 | 3 வருடம் | ரூ. 24,000 |
| ரூ. 20,000 | 3 வருடம் | ரூ. 48,000 |

## குழந்தைகள் எதிர்காலப் பாதுகாப்புத் திட்டம் (TM)

| டெபாசிட் | காலம் | முதிர்வுத் தொகை |
|---|---|---|
| ரூ. 1,000 | 15 வருடம் | ரூ. 37,000 |
| ரூ. 5,000 | 15 வருடம் | ரூ. 1,85,000 |
| ரூ. 10,000 | 15 வருடம் | ரூ. 3,70,000 |

## பெஸ்ட் பாண்ட் ஸ்கீம் (TM)

| டெபாசிட் | காலம் | முதிர்வுத் தொகை |
|---|---|---|
| ரூ. 1,000 | 10 வருடம் | ரூ. 12,000 |
| ரூ. 5,000 | 10 வருடம் | ரூ. 60,000 |
| ரூ. 10,000 | 10 வருடம் | ரூ. 1,20,000 |

## தாத்தாவின் பரிசுத் திட்டம் (TM)

| டெபாசிட் | காலம் | முதிர்வுத் தொகை |
|---|---|---|
| ரூ. 1,000 | 15 வருடம் | ரூ. 37,000 |
| ரூ. 5,000 | 15 வருடம் | ரூ. 1,85,000 |
| ரூ. 10,000 | 15 வருடம் | ரூ. 3,70,000 |

## பெஸ்ட் பெனிபிட் அண்டு கேரண்டி பண்ட் டிரஸ்ட் (Regd) (நிறுவியது : 1979)
## பெஸ்ட் பெனிபிட் பண்ட் லிமிடெட்

*தலைமை காரியாலயம் : 3வது மாடி, சாந்தி காம்ப்ளெக்ஸ், 26, ரங்கநாதன் தெரு, மாம்பலம் ரயிலடி சமீபம். T. நகர், சென்னை - 17.*

*கிளை : 7, முதல் மாடி, ஸ்டேஷன் ரோடு, தாம்பரம் சானடோரியம், சென்னை - 47.*

*கிளை : 5, 2வது மெயின் ரோடு, நியூ காலனி, குரோம்பேட்டை, சென்னை - 44.*

*கிளை : 13, காலேஜ் ரோடு, நங்கநல்லூர், சென்னை - 114.*

சொத்து பாதுகாப்பு, மாத வட்டிக்கும், அசலுக்கும் முன்கூட்டியே செக்.

**உங்கள் வீட்டிற்கும் வந்து சேவை செய்கிறோம். போன் : 4348560, 4347025.**

**BBGFT** - பாதுகாப்பின் சின்னம்

*Prof. V. விவேகானந்த்*
B.Com., (Distn), DOA (Distn), M.B.A. (Distn), CAIIB (All India First), EKSAMD (West Germany) (Distn), IAS (Topper)
**Managing Director**

*Dr. பரமேஸ்வரி, M.B.B.S.*
**Chairman**

(TM) :Trade Mark

**சேமிப்பு கணக்கு 14%**

**எல்லா காரியாலயங்களும் ஞாயிறும் திறந்திருக்கும்**